# 1. குளத்தங்கரை அரசமரம்

– வ.வே.சு. ஐயர்

பார்க்கப் போனால் நான் மரந்தான். ஆனால் என் மனசிலுள்ளதையெல்லாம் சொல்லுகிறதானால் இன்னைக்கெல்லாம் சொன்னாலும் தீராது. இந்த ஆயுசுக்குள் கண்ணாலே எத்தனை பார்த்திருக்கிறேன்! காதாலே எத்தனை கேட்டிருக்கிறேன். உங்கள் பாட்டிகளுக்குப் பாட்டிகள் தவுந்து விளையாடுவதை இந்தக் கண்ணாலே பார்த்திருக்கிறேன். சிரிக்கீறீர்கள். ஆனால் நான் சொல்லுகிறதிலே எள்ளளவேனும் பொய்யில்லை. நான் பழைய நாளத்து மரம்- பொய் சொல்லக் கத்ததில்லை. இப்போ தொண்ணூறு ... நூறு வருஷமிருக்கும். உங்கள் கொள்ளுப்பாட்டிகளின் பாட்டிகளெல்லாம் நம்ம குளத்தங்கரைக்குத் தான் குடமுங் கையுமாக வருவார்கள். சில பேர் குழந்தைகளையுங் கூடக் கூட்டிக் கொண்டு வருவார்கள். பட்டுப்பட்டாயிருக்கும் குழந்தைகள். அதுகளைக் கரையில் விட்டுவிட்டுப் புடவைகளை அழுக்குப் போகத் தோய்த்து மஞ்சள் பூசிக் கொண்டு அழகாக ஸ்நாநம் பண்ணுவார்கள். குழந்தைகளெல்லாம் ராஜ கோபாலன் போலத் தவுந்து கொண்டு மல்லிகைச் செடியண்டே போய் மல்லிகை மொக்குகளைப் பார்த்துச் சிரிக்கும். அந்தக் காலத்திலே ஒரு பவள மல்லிகைச் செடி, முத்து முத்தாய்ப் பூப் பூத்துக் கொண்டு அந்த ஓரத்திலிருந்தது. குளத்தங்கரையெல்லாம் கம் என்று மணம் வீசும். இப்பொழுது ஆதரிப்பாரில்லாமல் பட்டுப் போய் விட்டது. கொஞ்சம் பெரிய குழந்தைகள் அதன் புஷ்பங்களைப் பொறுக்கி ஆசையுடன் மோந்து பார்க்கும்...ஆ! அந்த நாளையெல்லாம் நினைத்தால் என்ன ஆசையாருக்கிறது!

ஆனால் இப்போது நான் உங்களுக்கு அந்தக் காலத்துக் கதை ஒன்றும் சொல்லுவதாக இல்லை. மனசு சந்தோஷமாகயிருக்கும் போது சொல்லுகிறேன். ஏழெட்டு நாளாய் எனக்கு ருக்மிணியன் ஞாபகமாகவேயிருக்கிறது.

பதினஞ்சு வருஷமாச்சு. ஆனால் எனக்கு நேற்றுப் போலிருக்கிறது. உங்களில் ஒருவருக்கும் ருக்மிணியைத் தெரியாது. பார்த்தால் சுவர்ண விக்கிரகம் போலிருப்பாள் குழந்தை. அவளுடைய சிரிச்ச முகத்தை நினைச்சால் அவளே எதிரில் வந்து நிற்பது போல இருக்கிறது எனக்கு. அவள் நெத்தியின் அழகை இன்னைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். நல்ல உயரமாக இருப்பாள். அவள் கையும் காலும் தாமரைத் தண்டுகள் மாதிரி நீளமா இருக்கம். அவள் சரீரமோ மல்லிகைப் புஷ்பம் போல மிருதுவாக இருக்கும். ஆனால் அவள் அழகெல்லாம் கண்ணிலே தான். என்ன விசாலம்! என்ன தெளிவு! என்ன அறிவு! களங்கமற்ற நீல ஆகாயம் ஞாபகத்துக்கு வரும் அவள் கண்களைப் பார்த்ததும் - நீலோற்பலம் நிறைந்த நிர்மலமான நீரோடையைப் பார்ப்பது போலிருக்கும். பார்வையிலுந்தான் எத்தனை அன்பு! எத்தனை பரிவு! சோமவார அமாவாசைகளில் பரமாத்மாவைப் பூஜிக்கிற தற்காக என்னைப் பிரதட்சணம் செய்வாள். அப்போது அவள் என்னைப் பார்க்கும் பார்வையிலிருக்கும் அன்பை என்னவென்று சொல்லுவேன்! என்னுடைய காய்ந்து போன கப்புகளுங்கூட அவளுடைய பிரேமையான பார்வை பட்டதும் துளிர்த்து விடுமே! ஐயோ, என் ருக்மிணித் தங்கமே! எப்போ காண்பேன் இனிமேல் உன்னைப் போலக் குழந்தைகள்?

அவள் குழந்தைப் பருவம் முதல், அவளுடைய கடைசி நாள் வரையில், இங்கே வராத நாளே கிடையாது. அஞ்சாறு வயதின் போதெல்லாம் சதாசர்வ காலமும் இங்கேயே தான் விளையாடிக் கொண்டிருப்பாள். அவளைப் பார்த்ததும் வாரியெடுத்து முத்தங் கொடுக்க வேணுமென்று நினையாதவர் இல்லை. எத்தனை அவசரமான காரியமிருந்தாலும் சரி, நம்ம வேணு கோபால சாஸ்திரி இருந்தாரே, அவர் காலமே ஸ்நானஞ் செய்து விட்டு, குழந்தை கை நிறைய மல்லிகைப் பூப்பறித்துக் கொடுத்துவிட்டுத்தான் போவார். நம்மூர் மாடு கன்றுகள் கூட, எத்தனை முரடாக இருந்தாலும் சரி, அவளைக் கண்டதும் உடனே முரட்டுத்தனத்தை யெல்லாம் விட்டுவிட்டு, அவளுடைய சிறிய கைகளால்

போய்க் காத்துக் கொண்டிருக்கும்.

குழந்தைகள் என்றால் எனக்கு எப்பொழுதுமே ஆசை. ஆனால் அவள் வந்துவிட்டால் போதும். மெய்ம்மறந்து போய் விடுவேன். அவள் பேரில் துளி வெயில் படக்கூடாது. அவள் கொஞ்சம் ஒதுங்கி இருந்தால் கூட என் கைகளை நீட்டி அவளுக்குக் குடை பிடிப்பேன். என்னுடைய நாதனான சூரியனுடைய முகத்தைக் காலமே ஆசை பயபக்தியோடு தரிசனம் செய்தானதும் எனக்குக் குழந்தை ருக்மிணியின் ஞாபகம் வந்துவிடும். அவள் வரவை ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டே இருப்பேன். அவள் வந்ததும் எனக்குள் அடங்காத ஆனந்தம் பிறந்து விடும். குழந்தைகளுக்குள் பேதம் பாராட்டக் கூடாது தான். ஆனால் மற்ற யார் வந்தாலும் எனக்கு அவள் வருகிறது போல் இருப்ப தில்லை. நான் மாத்திரமா? ஊரிலுள்ள மற்ற குழந்தைகள் கூட அவள் வந்த பிறகு தான் பூரணமான ஆனந்தத்துடன் விளையாடும். அவள் தான் அவர்களுக்குள்ளே ராணி. அத்தனை காந்த சக்தியிருந்தது அவளிடத்தில்.

அப்போதெல்லாம் அவள் அப்பா காமேசுவரையர் நல்ல வசதியில் இருக்கிறார். குழந்தை பேரில் அவருக்கு மிகுந்த பிரேமை. அவளுக்குச் செய்வதற்கு என்றால் அவருக்குச் சலிக்கிறதே இல்லை. கடை வீதியில் பட்டுத் தினுசுகள் புதுசாக வந்திருப்பது ஏதாவது பார்த்தால் "நம்ம ருக்மிணி அணிந்து கொண்டால் அழகாக இருக்கும்" என்று உடனே வாங்கிக் கொண்டு வந்து விடுவார். முதல் தரமான வைரமும் சிவப்பும் இழைத்து அவளுக்கு நிறைய நகைகள் செய்திருந்தார். அவளுக்குப் பத்து வயசாயிருந்த போது கோலாட்ட ஜோத்ரைக்கு என்று ஒரு பாவாடையும் தாவணியும் வாங்கியிருந்தார். அந்த நிலாவுக்கும் அவளுடைய அலங்காரத்துக்கும் அவளுடைய அழகுக்கும் என்ன கம்பீரம்! என்ன கம்பீரம்! கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது எனக்கு! அவள் குரலைப்பற்றி உங்களுக்குச் சொல்ல மறந்து போய் விட்டேன். குயில் என்னத்துக்கு ஆச்சு! தங்கக் கம்பிபோல இழையும் அவள் சாரீரம், இன்றைக்

ெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாலும் சலிக்காது. ஜோத்ரைகளின் போதுதான் அவள் பாட்டை நான் கேட்டிருக்கிறேன். ஆனால் இப்போது நினைச்சாலுங் கூட அவளுடைய குரல் அதே இனிமையுடனும் நயத்துடனும் என் மனசில் கேட்கிறது.

அவளுக்கு வயசாக ஆக, அவளுடைய அன்பு வளர்ந்த அழகை என்ன என்று சொல்லுவேன்? குழந்தையாக இருக்கும் போதே யாரிடத்திலும் ஒட்டுதலாக இருப்பாள். இந்தக் குணம் நாளுக்கு நாள் விருத்தியாய்க் கொண்டே வந்தது. தோழிகள் வேறு, தான் வேறு என்கிற எண்ணமே அவளுக்கு இராது. ஏழை வீட்டுப் பெண்ணாயிருந்தாலும் சரி, பணக்காரர் வீட்டுப்பெண்ணாயிருந்தாலும் சரி, அவளுக்கு எல்லாத் தோழிகள் பேரிலும் ஒரே பிரியம் தான். இன்னும் பார்க்கப் போனால் ஏழைக் குழந்தைகள் பேரில் மற்றவர்கள் பேரில் விட அதிகமான பாசம் காட்டுவாள். யாராவது கஷ்டப்பட்டால் சகிக்க மாட்டாள். பிச்சைக்காரர்கள் வந்தால் கை நிறைய அரிசி கொண்டு வந்து போடுவாள். கண்பொட்டையான பிச்சைக்காரர்களைப் பார்க்கும் போது அவளை அறியாமலே அவள் கண்ணில் தாரை தாரையாய்க் கண்ணீர் பெருகுவதை எத்தனை தடவைகளில் நேரில் பார்த்திருக்கிறேன்! அவர்களுக்கு, மற்றவர்களுக்குப் போடுவதை விட அதிகமாகவே பிச்சை போடுவாள். இப்படி அளவு கடந்த தயையும் இரக்கமும் அவளுக்கு இருந்ததனால் தான் அவளை நினைக்கும் போதெல்லாம் எனக்குக் கடினமான கோடைக்குப் பிறகு நல்ல மழை பெய்யும் போது உண்டாகுமே, அந்த நிரதிசயமான ஆனந்தம் உண்டாகிறது.

இவ்விதம் கண்ணுக்குக் கண்ணாய் நான் பாவித்து வந்த என் அருமைக் குழந்தையின் கதி இப்படியா போகணும்! பாவி நான் வைச்ச ஆசை பழுதாய்ப் போகணுமா! பிரும்ம தேவனுக்குக் கொஞ்சங் கூடக் கண்ணில்லாமல் போய் விட்டதே! ஆனால் பிரும்ம தேவன் என்ன பண்ணுவான், மனுஷாள் செய்யும் அக்கிரமத்துக்கு?

ருக்மிணிக்கு பன்னிரண்டு வயசானதும் அவள் அப்பா அவளை நம்மூர் மணியம் ராமசுவாமி ஐயர் குமாரன் நாகராஜனுக்குக் கன்னிகாதானமாகக் கொடுத்தார். கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தது. தோழிப் பொங்கலன்னிக்கும். ஊர் கோலத்தன்னிக்கும் அவள் சர்வாலங்காரத்துடனும் கிராமப் பிரதட்சணம் வருவதைப் பார்த்தேன், கண்பட்டுவிடும், அத்தனை அழகாயிருந்து! அவள் தோழிகளுக்கு மத்தியில் இருந்ததைப் பார்க்கும் போது, மின்னற் கொடிகளெல்லாம் சேவித்து நிற்க மின்னரசு ஜொலிக்குமே, அந்த மாதிரியே தான் இருந்தது.

காமேசுவரையர் ருக்மிணிக்குக் கல்யாணப் பந்தலில் நிறையச் சீரும் செனத்தியும் செய்திருந்தார். ருக்மிணியின் மாமியாருக்கும் மாமனாருக்கும் ரொம்பத் திருப்தி யாயிருந்தது. கல்யாணத்துக்குப் பிறகு மாமியார் அவளை அடிக்கடி அழைத்துக் கொண்டு போய் அகத்திலேயே வைச்சுக் கொள்வாள். ஆசையோடு அவளுக்குத் தலை பின்னிப் பூச்சுட்டுவாள். தன் உறவினர்களைப் பார்க்கப் போகும் போது அவளை அழைச்சுக் கொண்டு போகாமல் போகவே மாட்டாள். இப்படி சகல விதமாகவும் ஜானகி, (அதுதான் ருக்மிணி மாமியார் பேர்) தனக்கு ருக்மிணியின் பேரிலுள்ள அபிமானத்தைக் காட்டி வந்தாள். மாப்பிள்ளை நாகராஜனும் நல்ல புத்திசாலி. அவனும் ருக்மிணியின் பேரில் மிகவும் பிரியமாய் இருப்பான். கிராமத்தில் அவர்கள் இருவரும் தான் ரூபத்திலும் புத்தியிலும் செல்வத்திலும் சரியான இணை என்று நினைக்காதவர், பேசிக் கொள்ளாதவர் கிடையாது.

இப்படிமூணு வருஷ காலம் சென்றது. அந்த மூணு வருஷத்துக்குள் எத்தனை மாறுபாடுகள்! காமேசு வரையருக்குக் கையிளைச்சுப் போய்விட்டது. ரொக்கப் பணத்தையெல்லாம், ஏதோ அருபத்து நாட்டுக் கம்பெனியாம், அதில் வட்டிக்குப் போட்டிருந்தார். நம்மூர்ப் பணம் நாலு கோடி ரூபாயையும் முழுங்கிவிட்டு அது ஏப்பம் விட்டுவிடவே, காமேசுவரையர் ஒரு நாளில் சர்வ ஏழையாய்ப் போய்விட்டார். ருக்மிணியின் தாயார் மீனாட்சியம்மாள் உடம்பிலிருந்த நகைகள் தான்

அவருக்கு மிச்சம். பூர்வீக சொத்தான வீட்டையும் நிலங்களையும் வித்துத்தான் அவர் கொடுக்க வேண்டிய கடன்களைத் தீர்க்க வேண்டியதாயிருந்தது. இப்போ குப்புசாமி ஐயர் இருக்காரே வாய்க்கால் கரை யோரத்திலே, அந்த வீட்டில் வந்து அவர் குடியிருக்க லானார். மீனாட்சியும் பார்க்கிறதுக்கு மகாலட்சுமி மாதிரி இருப்பாள். அவளுடைய சாந்தத்துக்கு எல்லையே இல்லை. எத்தனை பெரிய கஷ்டம் வந்து விட்டதே, இருந்தாலும் அவள் மனம் கொஞ்சமேனும் இடிய வில்லை. "ஏதோ இத்தனை நாள் சுகமாக வாழ்ந்தோம். யாரைக் கேட்டுக் கொண்டு சுவாமி கொடுத்தார்! அவர் கொடுத்ததை அவரே எடுத்துக் கொண்டு விட்டார். இதனாலே என்ன இப்போ? அவாளும் ருக்மிணியும் ஆயுசோடு இருக்கிறவரையில் எனக்கு ஒரு குறைச்சலுமில்லை. இந்தத் தை மாதத்திலே ருக்மிணிக்குச் சாந்தி முகூர்த்தம் பண்ணிப் புக்காத்துக்கு அனுப்பி விட்டால் அப்புறம் எங்களுக்கு கவலையில்லை. கஞ்சியோ கூழோ சாப்பிட்டுக் கொண்டு வழக்கம்போல பகவத் தியானம் பண்ணிக் கொண்டே எங்கள் காலத்தைக் கழித்து விடுகிறோம்" என்று சொல்லுவாள். ஐயோ பாவம் நடக்கப் போகிற சங்கதியை அவள் எப்படி அறிஞ்சிருப்பாள்.

காமேசுவரையார் சொத்தில் கொஞ்சமேனும் தேறாது என்று ஏற்பட்டதும் ராமசுவாமி ஐயருக்கு அவருடனிருந்த சிநேகம் குளிர ஆரம்பித்துவிட்டது. இதற்கு முன்னெல்லாம் அவர் காமேசுரையர் அகத்துக்கு அடிக்கடி வருவார். வழியில் அவரைக் கண்டால் பத்து நிமிஷம் நின்று பேசாமல் போகவே மாட்டார். இப்பொழுதோ காமேசுவரையர் தூர வருகிறதைக் கண்டு விட்டால், ஏதோ, அவசர காரியமாகப் போகிறதுபோல இன்னொரு பக்கம் திரும்பி வேகமாகப் போய் விடுவார். இப்படிச் செய்பவர் அவர் வீட்டுக்கு வருவதை நிறுத்தி விட்டார் என்று நான் சொல்லாமலே நீங்கள் நினைத்துக் கொண்டு விடுவீர்கள். அவர் சம்சாரம் ஜானகியும் அதே மாதிரி மீனாட்சியம்மாளிடம் நெருங்குவதை நிறுத்தி விட்டாள். ஆனால் இதை யெல்லாம். செல்வமுள்ள

காமேசுவரையரும் ஒருபொருட்டாக நினைக்கவில்லை. அது போய்விட்டபோது வேத்து மனுஷாள் போலப் போய்விடுகிறது. இதெல்லாம் ஒரு சிநேகத்தோடு சேர்த்தியா?

ஆனால் அவர்கள் ருக்மிணி விஷயத்திலுங்கூட வேற்றுமை பாராட்ட ஆரம்பித்து விட்டார்கள். அருபத்து நாட்டு உடைகிறதற்கு முந்தி சில மாதங்களாக ஜானகி பிரதி வெள்ளிக்கிழமையும் சாப்பிட்டானதும், ருக்மிணியை அழைத்துக் கொண்டு வரும்படி வேலைக்காரியை அனுப்பிவிடுவாள். அன்னைக்கு, அவளுக்குத் தலைபின்னி, மைச்சாந்திட்டு, சிங்காரிச்சு, அகிலாண்டேசுவரி கோவிலுக்குக் கூட்டிக் கொண்டு போய்த் தரிசனம் பண்ணிவிட்டு, அன்னைக்கு ராத்திரி முழுவதும் தங்கள் அகத்திலேயே வைத்துக் கொண்டிருந்து அடுத்த நாள் காலமேதான் அவளை அகத்துக்கு அனுப்புவாள். ஆனால், அருபத்து நாட்டில் போனது போனதுதான் என்று ஏற்பட்டு விட்ட பிறகு வந்த முதல் வெள்ளிக் கிழமை யன்னைகே, 'எனக்கு ஆத்தில் இன்னைக்கு ரொம்ப வேலையாக இருக்கும், அடுத்த வெள்ளிக்கிழமை ருக்மிணியை அழைச்சுப் போறேன்' என்று மீனாட்சிக்குச் சொல்லியனுப்பி விட்டாள். அடுத்த வெள்ளிக்கிழமை முதல் அவ்விதம் சொல்லியனுப்புவதைக் கூட நிறுத்தி விட்டாள். இது மீனாட்சிக்கும் காமேசுவரையருக்கும் மிகுந்த துக்கத்தைத் தந்தது. ருக்மிணியும், 'நம்மை இவ்வளவு இளக்காரம் செய்கிறாள் பாத்தாயா நம்ம மாமியார் கூட!' என்று மிகவும் வருத்தப்பட்டாள்.

இப்படிக் கொஞ்ச நாளாச்சு, ஊரெல்லாம் 'குசுகுசு' என்று பேசிக்கொண்டிருப்பார்கள். எல்லா ரகசியங்களும் குளத்தங்கரையிலே தான். ஆனால் அரை வார்த்தையும் குறை வார்த்தையுமாகத்தான் என் காதில் விழுமே யொழிய முட்ட முழுக்க ஒரு பேச்சும் எனக்கு எட்டாது. ஊரிலே இப்படி எப்போதும் இருந்ததில்லை. எனக்கு மனசு குறுகுறுத்துக் கொண்டேயிருந்தது. என்னவோ கெடுதலுக்குத்தான் இத்தனை ரகசியம் வந்திருக்கிறது

என்று எனக்கு அப்பொழுதே தோன்றி விட்டது. ஆனால் யாருக்கு, என்ன, என்று மாத்திரம் தெரியவில்லை.

கடைசியாக அப்படியும் இப்படியும், அத்தையும் இத்தையும் கூட்டிச் சேர்த்துப் பார்க்கப் பார்க்க, கொஞ்சங் கொஞ்சமாய்ச் சமாசாரம் என் மனசுக்கு அத்துபடியாச்சு. ராமசாமி ஐயரும் ஜானகியும் ருக்மிணியை வாழாதே பண்ணிவிட்டு நாகராஜனுக்கு வேறு கல்யாணம் செய்து வைக்க நிச்சயித்து விட்டார்கள்! என்ன பண்ணுவேன்! என் மனசு இடிஞ்சுபோய் விட்டது. குழந்தை ருக்மிணியைத் தள்ளி வைக்கத் துணியுமா மனுஷாளுக்கு? அடிப்பாவி! உன்னைப்போலே அதுவும் ஒரு பெண்ணில்லையா! என்ன பண்ணித்து அது உன்னை! அதைக் கண்ணாலே பார்த்தால் கல்லும் இரங்குமே! கல்லையும் விட அழுத்தமா உன் நெஞ்சு! காமேசுவரை யருக்கும் மீனாட்சிக்கும் முகத்திலே ஈ ஆடாது. எனக்கே இப்படி இருந்தபோது, பெத்த தாயார் தகப்பனாருக்குக் கேட்கணுமா?

இனிமேல் நாகராஜனைப்பற்றி ஏதாவது நம்பிக்கை வைத்தால்தான் உண்டு! அவன் பட்டணத்தில் படித்துக் கொண்டிருந்தான். மார்கழி பிறந்து விட்டது. அவன் வருகிற நாளை எண்ணிக்கொண்டே இருந்தேன். கடைசியாக வந்து சேர்ந்தான். வந்த அன்னைக்குக் காலமே அவன் முகத்தில் சிரிப்பும் விளையாட்டுமாக இருந்தது, சந்தோஷம் மாறிவேறாகி விட்டது. தாயார் தகப்பனார் அவன் மனதைக் கலைக்க ஆரம்பித்து விட்டார்கள். நாளுக்கு நாள் முகத்தில் கலக்கம் அதிகரித்துக்கொண்டே வந்தது. கரைப்பார் கரைச்சால் கல்லுங் கரையும் என்பார்கள். அவன் கலங்கின முகத்தைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு வயித்திலே பகீர் என்னும். 'இனி மேல் ஏது? இந்த ஒரு ஆசை இருந்தது. அதுவும் போய் விட்டது. ருக்மிணியின் கெதி அதோகதி தான்' என்று நினைத்து விட்டேன்.

தை பிறந்தது. வெளிப்படையாகப் பேச ஆரம்பித்து விட்டார்கள். ஏதோ கிழக்கத்திப் பெண்ணாம். தகப்பானாருக்கு நாலு லட்ச ரூபாய்க்குச் சொத்தாம்.

பிள்ளை கிடையாதாம். இந்தப் பெண்ணைத் தவிர இன்னும் ஒரே ஒரு பெண்தானாம். காலாக்கிரமத்தில் ராமசாமி ஐயர் குடும்பத்துக்கு இரண்டு லட்ச ரூபாய் சொத்துச் சேர்ந்து விடுமாம். இதெல்லாம் எனக்குக் கர்ண கடூரமாக இருக்கும். ஆனால் என்ன செய்கிறது? தலைவிதியே என்று கேட்டுக் கொண்டிருப்பேன்.

இந்தப் பேச்சுப் புறப்பட்டது முதல், மீனாட்சி பகலில் வெளியிலிருந்து வருகிறதில்லை. சூரியோதயத்துக்கு முன்னேயே குளத்துக்கு வந்து ஸ்நானம் செய்துவிட்டுத் தீர்த்தம் எடுத்துக் கொண்டு போய் விடுவாள். அவள் முகத்தைப் பார்த்தால் கண்டராவியாயிருக்கும். சரியான தூக்கமேது? சாப்பாடேது? ஓஹோ என்று வாழ்ந்து விட்டு, இந்தக் கதிக்கு ஆளானோமே என்கிற ஏக்கம் அவள் அழகை அழித்துவிட்டது. வீடுவாசல் போய் விட்டதே என்றும், நகை நட்டெல்லாம் போய், வெறும் உரிசல் தாலியை மாத்திரம் கட்டிக் கொண்டிருக்கும் படியாகி விட்டதே என்றும் அவள் வருத்தப்படவில்லை. கிளிபோல் குழந்தை அகத்திலிருக்க, ஜானகி அதன்பேரில் கொஞ்சமேனும் இரக்கம் வைக்காமல் கண்ணுக்கெதிரவே பிள்ளைக்கு வேறு கல்யாணம் பண்ணி வைக்க நினைத்து விட்டாள் பார்த்தாயா என்னும் ஏக்கந்தான் அவளுக்கு இரவு பகலெல்லாம். அவள் முகத்தைப் பார்த்தால் ஜானகிக்குக்கூட மனசு உருகிப் போய் விடும். ஆனால் ராணி, அவளெங்கே பார்ப்பாள்!

அப்போதெல்லாம் ருக்மிணி எப்படி இருந்தாளோ, என்ன நினைத்தாளோ எனக்கொண்ணுந் தெரியாது. அறியாக் குழந்தை அது என்ன நினைத்திருக்குமோ! ஒரு வேளை, மாமியார் நம்மைக் கட்டோடே கெடுத்துவிட மாட்டாள் என்று நினைத்தாளோ! அல்லது மாமியார் என்ன நினைத்தாலும் நாகராஜன், சம்மதிக்க மாட்டான் என்று நினைத்தாளோ? இன்னும் முட்ட முழுக்க ஐந்து வருஷமாக வில்லையே அவர்களிருவரும் ஜோடியாய் நம்ம குளத்தங்கரையில் விளையாடி! கல்யாணமான பிறகுகூட ஒருவருக்குந்தெரியாமல் எத்தனை தடவை பார்த்துப் பழைய நாள் போலவே அன்பும் ஆதரவுமாக

மாட்டான் என்றேதான் ருக்மிணி நினைத்திருப்பாள்.

ஆனால் நாளாக ஆக நாகராஜனுடைய கல்யாணப் பேச்சு முத்திக்கொண்டே வந்தது. நாகராஜன் மனதில் மாத்திரம் இன்னது இருக்கிறது என்று யாருக்கும் தெரியாது. பட்டணத்திலிருந்து வந்த அன்று, மாமனாரையும் மாமியாரையும் நமஸ்காரம் செய்வதற்காக அகத்துக்கு வந்தானே அவ்வளவு தான். பிறகு ருக்மிணியை அவன் நினைத்தான் என்பதற்கு எள்ளளவு கூட அடையாளமில்லை. ஆனால் முகத்தைவிட்டு முதல்நாள் போன உல்லாசக் களை மறுபடியும் திரும்பி வரவேயில்லை. யாருடனும் பேசாமல் எப்பொழுதும் சுளித்த முகமாகவே இருப்பான்.

கடைசியாக, நாள் வைத்தாகி விட்டது, பெண்ணகத்துக் காரர் வந்து முகூர்த்தப் பத்திரிகையும் வாசித்து விட்டுப்போய் விட்டார்கள், ஐயோ! அன்னைக்கு மேளச் சத்தத்தைக் கேட்க என் பஞ்சப் பிராணனும் துடித்தது. காமேசுவர ஐயருக்கு எப்படி இருந்திருக்குமோ! மீனாட்சிக்கு மனசு எப்படித் துடித்ததோ? ருக்மிணி எப்படிச் சகித்தாளோ? எல்லாம் ஈசுவரனுக்குத்தான் தெரியும்.

நாகராஜனுக்குக்கூடத் துளி இரக்கம் பச்சாத் தாபமில்லாமற் போய்விட்டது பார்த்தாயா என்று நான் அழாத நாள் கிடையாது. சில வேளைகளில், இப்படி யெல்லாம் பண்ணினால் இவன் மாத்திரம் நன்றாக இருப்பானா என்று கூடச் சொல்லிடுவேன்...... இப்படி என் மனசு தளும்பித் தத்தளித்துக் கொண்டிருக்கிற போது, ஒரு நாள் வயித்திலே பால் வார்த்தாப்போல ஒரு சங்கதி என் காதிலே விழுந்தது. நாகராஜனோடு கூடப் படித்துக் கொண்டிருந்தவனாம் ஸ்ரீநிவாசன் என்ற ஒரு பையன். அவன் நாகராஜனைப் பார்க்கிறதற்கென்று வந்தான். அவர்களுக்கெல்லாம் ரகசியமாகப் பேச இடம் வேறெங்கே? நம்ம குளத்தங்கரைதானே?

ஒரு நாள் சாயங்காலம் ஏழெட்டு மணிக்கு எல்லோரும் போய்விட்ட பிறகு இவர்கள் இரண்டு பேரும் இங்கே வந்தார்கள். ஸ்ரீநிவாசன் ரொம்ப

நல்லவன். அவன் ஊர் ஐம்பது அறுபது மைல்களுக்கப் பாலிருக்கிறது. நாகராஜன், பெண்ணிருக்க, வேறு பெண் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறான் என்று யாரோ அவனுக்கு எழுதிவிட்டார்களாக்கும். உடனே தபால் வண்டி மாதிரி ஓடி வந்து விட்டான். குளத்தங்கரைக்கு வந்ததும், தான் கேள்விப்பட்டதைச் சொல்லி இதெல்லாம் உண்மைதானா என்று அவன் நாகராஜனைக் கேட்டான். நாகராஜனும், "அம்மாவும் அப்பாவும் சேர்ந்து நிச்சயம் செய்து விட்டபோது நான் மாட்டேன் என்று சொன்னால்தான் தீரப் போகிறதா? தவிர, பெண்ணும் லட்சணமாக இருக்கிறாளாம். அவள் தகப்பனார், லட்ச ரூபாய் சொத்து அவள் பேருக்கு எழுதி வைத்திருக்கிறாராம். அவருக்குப் பிற்காலத்தில் இன்னொரு லட்ச ரூபாய் சொத்துச் சேருமாம். இப்படித் தானே வருகிற ஸ்ரீதேவியை எதற்கு வேண்டாமென்று சொல்லுகிறது?" என்று சொன்னான்.

இந்த வார்த்தையெல்லாம் சொல்லும்போது ஸ்ரீநிவாசன் முகம்போன போக்கை என்ன என்று சொல்லுவது? நாகராஜன் நிறுத்தினதும் அரைமணி தேசகாலம் ஸ்ரீநிவாசன் அவனுக்கு, "எத்தனை லட்சந்தான் வரட்டுமே, ஒரு பெண் பாவத்தைக் கட்டிக் கொள்ளலாமா? கல்யாணப் பந்தலில் மந்திர ரூபமாகச் செய்த பிரமாணத்தையெல்லாம் அழித்து விடலாமா" என்று நானாவிதமாய்த் தர்மத்தையும் நியாயத்தையும் எடுத்துச் சொல்லி கல்லுங்கரையும் படியாக ருக்மிணிக்காகப் பரிஞ்சு பேசினான். அவன் நன்றாக இருக்க வேணும், சேஷமமாக இருக்க வேணும், ஒரு குறைவு மில்லாமல் வாழ வேணும் என்று நிமிஷத்துக்கு நிமிஷம் நான் வாழ்த்திக் கொண்டே இருந்தேன்.

ஆனால் அவன் பேசியானதும் நாகராஜன் அவனைப் பார்த்து "ஸ்ரீநிவாசா, உன்னிடம் இது வரை சொன்ன தெல்லாம் விளையாட்டாக்கும் நான் காசுக்காக இவ்வளவு அற்பமாகப் போய்விடுவேன் என்று நினைக்கிறாயா? நான் யாருக்கும் தெரியாமல் வைத்துக்கொண்டிருக்க வேணும் என்றிருந்தேன். ஆனால் எப்போ இவ்வளவு தூரம் பேசி விட்டோமோ, இனிமேல் உனக்குத்

தெரியாமல் வைக்கிறதில் காரியமில்லை என்று நினைத்துவிட்டேன். ஆனால் ஒன்று மாத்திரம்; இதை நீ யாருக்கும் சொல்லக்கூடாது. இவர்களெல்லாம் நியாயத்தை விட்டு மிலேச்சத்தனமாய் நடக்க உத்தேசித்திருக்கிற படியால், இவர்களை நன்றாக அவமானம் செய்து விட வேண்டியதென்று நிச்சயித்து விட்டேன். நான் எத்தனை மறுத்தும் அப்பாவும் அம்மாவும் ஒரே பிடிவாதமாக இருக்கிறார்கள். ஆகையால் மன்னார் கோவிலுக்கே போகிறேன். அங்கே போயும் மாட்டேனென்றே சொல்லுவேன். ஆனால் கட்டாயப்படுத்தத்தான் போகிறார்கள். முகூர்த்தப் பந்தலிலும் உட்காருவேன். ஆனால் என்ன இருந்தாலும் திருமாங்கலியத்தில் நான் தானே முடிச்சுப் போட வேணும்? வேறு ஒருவரும் போட முடியாதே. அந்தச் சமயத்தில் கண்டிப்பாக மாட்டேனென்று சொல்லிவிடப் போகிறேன். எல்லோரும் இஞ்சி தின்ற குரங்குபோலே விழிக்கட்டும். ருக்மிணியைத் தொட்ட கையினாலே இன்னொரு பெண்ணையும் நான் தொடுவேன் என்று நினைக்கிறாயா? என்று சொல்லி முடித்தான்.

"ஆனால் நீ விவாகத்துக்கென்று போகுங்காலத்தில், ருக்மிணி, அவள் அப்பா அம்மா மனதெல்லாம் எப்படி யிருக்கும் என்று யோசித்துப் பார்த்தாயா?" என்று ஸ்ரீநிவாசன் கேட்டான். அதற்கு நாகராஜன், "யோசித்தேன்; ஆனால் எல்லாம் போய்விட்டதென்று அவர்கள் நிராசையாய்த் தவித்துக் கொண்டிருக்கும் சமயத்தில், திடீரென நான் ஓடிவந்து மாமியார் மாமனாரை வணங்கி, துயரப்படாதீர்கள்! என் ருக்மிணியை நான் ஒரு நாளும் கைவிடமாட்டேன்! பணத்தாசை பிடித்தவர்களை யெல்லாம் மணப் பந்தலில் மானபங்கம் செய்துவிட்டு இங்கே வந்துவிட்டேன்' என்று நான் சொல்லும் காலத்தில் அவர்களுக்கு எத்தனை ஆனந்தமாக இருக்கும்! அதைப் பார்த்து அனுபவிக்க விரும்புகிறேன்" என்றான்.

"அந்த நாள் வரையில் அவர்கள் மனசு எப்படி அடித்துக் கொண்டிருக்கும்? நினைத்துப் பார்" என்றான் ஸ்ரீநிவாசன். அதற்கு நாகராஜன், "இன்னும் ஐந்து நாளில்லை; இன்று வெள்ளிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை இவ்விடமிருந்து எல்லோரும் புறப்படப் போகிறோம்.

அடுத்த நாள் முகூர்த்தம், அன்றைக்கே புறப்பட்டு அடுத்த நாள் காலையில் இங்கே திரும்பிவிடுவேன். இத்தனை நாள் பொறுத்தவர்கள் இன்னும் ஐந்து நாள் பொறுக்க மாட்டார்களா?" என்றான். "என்னவோ அப்பா, எனக்கு இது சரியில்லை என்று தோன்றுகிறது" என்று ஸ்ரீநிவாசன் பேசிக்கொண்டிருக்கும் போதே இருவரும் நகர ஆரம்பித்து விட்டார்கள். எனக்கு மேலே ஒன்றும் கேட்கவில்லை.

அன்னைக்கு ராத்திரியெல்லாம் எனக்குத் தூக்கமே வர வில்லை, 'பார்த்தாயா, நாகராஜனை வையக்கூட வைதேனே பாவி, அவனைப்போல சத்புத்திரன் உண்டா உலகத்திலே' என்று சொல்லிக் கொண்டேன். 'இனிமேல் பயமில்லை; அஞ்சு நாளென்ன, பத்து நாளென்ன? நாகராஜன் பிடிவாதக்காரன்; சொன்னபடியே செய்து விடுவான். ருக்மிணிக்கு இனிமேல் ஒரு குறைச்சலு மில்லை' யென்று பூர்த்திப்போய் விட்டேன்.

ஞாயிற்றுக்கிழமை; இவர்களெல்லாம் மன்னார் கோவிலுக்குப் புறப்படுகிறார்களென்று ஊரெல்லாம் அல்லோல கல்லோலப்பட்டது. ராமசுவாமி ஐயரையும் ஜானகியையும் வையாதவர்கள் கிடையாது. ஆனால் அவர்களைக் கூப்பிட்டு நல்ல புத்தி சொல்லுவதற்கு மாத்திரம் ஒருவரும் இல்லை. அப்படியே யாரேனும் சொன்னாலும் அவர்கள் கட்டுப்படுகிறவர்களும் இல்லை.

அவர்கள் புறப்படுகிற அன்னைக்கு ஊரிலிருந்து கண்ணாலே பார்த்தால் இன்னும் கொஞ்சம் வயித் தெரிச்சல்தானே அதிகமாகுமென்று நினைத்து, காமேசு வரையரும் மீனாட்சியும் சனிக்கிழமை மத்தியானமே புறப்பட்டு மணப்பாறைக்குப் போய் விட்டார்கள். அகத்தில் ருக்மிணிக்கு அவள் அத்தை சுப்புலட்சுமி அம்மாள்தான் துணை.

சனிக்கிழமை ராத்திரியாச்சு. ஊரடங்க ஆரம்பித்து விட்டது. ஒன்பது ஒன்பதரை மணி இருக்கும். நாகராஜன் தனியாகக் குளத்தங்கரைக்கு வந்தான். வந்து வேப்பமரத் தடியில் உட்கார்ந்து கொண்டு ஏதோ யோசித்துக்

கொண்டிருந்தான். சில நாழிக்கெல்லாம் தூரத்தில் ஒரு பெண் உருவம் தென்பட்டது. அது குளத்தங்கரைப்பக்கம் வந்துகொண்டிருந்தது. ஆனால் அடிக்கொரு தடவை பின்பக்கம் பார்த்துக் கொண்டே வந்தது. கடைசியாக நாகராஜன் உட்கார்ந்து கொண்டிருந்த இடத்தில் வந்து நிற்கும்போது தான் அது ருக்மிணி என்று நான் அறிந்துகொண்டேன். எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. ஆனால் உடனே தெளிஞ்சு கொண்டு என்ன நடக்கிறது பார்க்கலாம் என்று கண்ணைத் துடைத்துக் கொண்டு உன்னிப்பாய்க் கவனிக்கலானேன்.

ஐந்து நிமிஷம் வரையில் நாகராஜன் கவனிக்கவே யில்லை. ஆழ்ந்த யோசனையில் இருந்தான். ருக்மிணி அசைவற்று அப்படியே நின்று கொண்டிருந்தாள். எதிர்ச்சையாய் நாகராஜன் தலையைத் தூக்கினான். ருக்மிணியைப் பார்த்தான். பார்த்ததும் அவனும் திடுக்கிட்டுப் போய் விட்டான். ஆனால் உடனே நிதானித்துக் கொண்டு, "ருக்மிணி, இத்தனை நாழிகைக்கு மேலே தனியாக இங்கே வரலாமா நீ?" என்று கேட்டான். "நீங்கள் இருக்கிற இடத்தில் தனியாக நான் இருக்க வேண்டிய நாள் இன்னும் வரவில்லையே" என்று பதில் சொல்லிவிட்டு ருக்மிணி நின்றாள். இரண்டு மூன்று நிமிஷத்துக்கு ஒருவரும் வாய் திறக்கவில்லை. இரண்டு பேர் மனதும் குழம்பிக்கொண்டிருந்தது. ஆனால் எப்படி ஆரம்பிக்கிறது, என்ன பேசுகிறது என்று அவர்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

கடைசியில் நாகராஜன், "இந்த வேளையில் நாம் இங்கே இருப்பது தெரிந்தால் ஊரில் ஏதாவது சொல்லு வார்கள்; வா, அகத்துக்குப் போய்விடலாம்" என்றான். அதற்கு ருக்மிணி, "உங்களிடத்தில் சில வார்த்தைகள் சொல்ல வேணுமென்று இந்த ஒரு மாதமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தேன்; இன்னைக்குத் தான் நேர்ந்திருக்கிறது; அதை சொல்ல உத்தரவு கொடுக்க வேணும்" என்றாள். சொல்லேன் என்று நாகராஜன் சொல்ல, ருக்மிணி பேசலானாள்;

எனக்கு உங்களிடத்தில் என்ன சொல்லுகிறது என்று தெரியவில்லை. இந்த மூணு மாசமாய் மனசு படுகிறபாடு அந்த அகிலாண்டேசுவரிக்குத்தான் தெரியுமே யொழிய மனுஷியாளுக்குத் தெரியாது. நீங்கள் பட்டணத்திலேயிருந்து வந்தவுடன் என் கலக்கமெல்லாம் போய்விடும் என்றிருந்தேன். மாமாவும் மாமியும் என்ன செய்தாலும் நீங்கள் என்னைக் கைவிடமாட்டீர்கள் என்று நம்பியிருந்தேன். ஆனால் நீங்களும் என்னைக் கைவிட்டுவிட்டால் அப்புறம் எதை நம்பிக்கொண்டு நான் வாழ்வேன்? வேலியே பயிரை அழித்துவிட ஆரம்பித்தால் பயிரின் கதி என்னவாகும்? இது வரையில் நடந்த தெல்லாம் என் மனசை உடைத்து விட்டது. நீங்கள் அதைச் சேர்த்து வைத்தால் தான் உண்டு, இல்லை யானால் என் ஆயுசு இவ்வளவுதான்; அதில் சந்தேகமில்லை."

இந்த வார்த்தையைப் பேசும்போது ருக்மிணியின் கண்களில் ஜலம் வந்து விட்டது. அத்தோடு நின்று விட்டாள். நாகராஜன் பேசவில்லை. ருக்மிணியும் சில நாழி வரைக்கும் பார்த்துவிட்டு, "நாளைக்குப் பயணம் வைத்திருக்காப் போலிருக்கிறதே: நீங்கள் போகத்தானே போகிறீர்கள்? என்று கேட்டாள். கொஞ்ச நாழி யோசித்துவிட்டு நாகராஜன், "ஆமாம், போகலாம் என்று தான் இருக்கிறேன்" என்றான். அப்படி அவன் சொன்னதும் ருக்மிணிக்கு நெஞ்சை அடைத்துக் கொண்டு துக்கம் வந்துவிட்டது. உடம்பு கிடுகிடு என்று நடுங்கியது. கண்ணில் ஜலம் தளும்பி விட்டது. ஆனால் பல்லைக் கடித்துக்கொண்டு அதையெல்லாம் வெளியில் காட்டிக் கொள்ளாமல், "அப்படியானால் நீங்கள் என்னைக் கைவிட்டு விட்டீர்கள் தானே?" என்று கேட்டாள். அதற்கு நாகராஜன், "உன்னை நான் கைவிடுவேனோ ருக்மணி? ஒரு நாளும் விடமாட்டேன். ஆனால் அம்மா அப்பாவைத் திருப்தி பண்ணி வைக்க வேண்டியதும் கடமைதானே? அதற்காகத்தான் அவர்கள் பேச்சைத் தட்டாமல் புறப்படுகிறேன். ஆனால் நீ கவலைப் படாதே. உன்னை நான் ஒருநாளும் தள்ளிவிட மாட்டேன்" என்றான். ருக்மிணிக்குப் பொறுக்கவில்லை.

நீங்கள் மறுவிவாகம் பண்ணிக் கொண்டுவிடுகிறது! நான் கவலைப்படாமலிருக்கிறது! என்னை ஒரு நாளும் கைவிடமாட்டீர்கள்! ஆனால் அப்பா அம்மா சொல்லுகிறதை இது விஷயத்தில் தட்டமாட்டீர்கள். நான் சொல்லக்கூடியது இனிமேல் என்ன இருக்கு? என்கதி இத்தனைதானக்கும்?" என்று சொல்லிக் கொண்டு அப்படியே உட்கார்ந்து விட்டாள்.

நாகராஜன் ஒன்றும் பேசவில்லை. கல்யாணத்தை நிறுத்திவிடுகிறேன் என்கிற ஒரு வார்த்தையைத் தவிர வேறே எந்த வார்த்தை சொன்னால் தான் ருக்மிணியின் மனதைத் தேத்தலாம்? அந்த வார்த்தையை இப்போதே சொல்லவோ அவனுக்குச் சம்மதமில்லை. ஆகையால் அவன் வாயால் ஒண்ணும் பேசாமல் தன் மனதிலுள்ள அன்பையும் ஆதரவையும் சமிக்கினையினால் மாத்திரம் அவளுக்கு ஒரு மாதிரிக் காட்டினான். அவள் கையைத் தன்னுடைய கைகளால் வாரி எடுத்து மடியில் வைத்துக் கொண்டு மிருதுவாய்ப் பிடித்தான். குழந்தையைத் தட்டிக் கொடுத்துத் தேத்துவதுபோல, முதுகில் ஆதரவோடு தடவினான். அப்பொழுது அவள் தலை முடி அவன் கையில் பட்டது. உடனே திடுக்கிட்டுப் போய், "என்ன ருக்மிணி, தலை சடையாய்ப் போய் விட்டதே; இப்படித் தானா பண்ணிக்கொள்ளுகிறது? உன்னை இந்த அலங் கோலத்தில் பார்க்க என் மனசு சகிக்கவில்லையே! எங்கே, உன் முகத்தைப் பார்ப்போம்! ஐயோ, கண்ணெல்லாம் செக்கச்செவேர் என்று சிவந்து போயிருக்கிறதே! முகத்தின் ஒளியெல்லாம் போய் விட்டதே! என் கண்ணே, இப்படி இருக்காதே உன்னை நான் கைவிடமாட்டேன் என்று சத்தியமாய் நம்பு. உன் மனசில் கொஞ்சங்கூட அதைரியப்படாதே. என் இருதய பூர்வமாகச் சொல்லு கிறேன்; எனக்குப் பொறுக்கவில்லை உன்னை இந்த நிலையில் பார்க்க, சின்ன வயதுமுதல் நாமிருந்த அன்னியோன்யத்தை மறந்துவிட்டேன் என்று கனவில் கூட நீ நினையாதே. வா, போகலாம், நாழிகையாகி விட்டது; இனிமேல் நாம் இங்கே இருக்கக்கூடாது" என்று சொல்லி முடித்தான்.

ருக்மிணி எழுந்திருக்கவில்லை. ஏக்கம் பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள். அதைப் பார்த்ததும் நாகராஜனுக்குக் கண்ணில் ஜலம் ததும்பி விட்டது. அந்த சமயத்தில் தன் மனத்திலுள்ள ரகசியத்தைச் சொல்லித் தான் விடலாமே என்று அவன் புத்தியில் தோன்றியது போலிருந்தது. சொல்லித்தான் வைத்தானா பாவி! ஆனால் அவனுக்கு அவனுடைய விளையாட்டுத் தான் பெரியதாய்ப் பட்டது. ஆகையினாலே அதை மாத்திரம் அவன் வாய்விடவில்லை. ஆனால் அவனுக்குத் தான் எப்படித் தெரியும். இப்படியெல்லாம் வரும் என்று? அத்தனை வயசாகி எனக்கே தெரியவில்லையே. அந்தச் சமயத்திலே, அவனுக்கு எங்கே தெரிந்திருக்கப் போகிறது குழந்தைக்கு?

அப்படிச் சீவனத்துப்போய் உட்கார்ந்திருந்த ருக்மிணியை நாகராஜன் மெல்லப் பூத்தாப்போலே தூக்கி மார்போடே அணைத்துக்கொண்டு, "என்ன, ஒன்றும் பேசமாட்டேன் என்கிறாயே ருக்மிணி; நான் என்ன செய்யட்டும்?" என்று கருணையோடு இரங்கிச் சொன்னான். ருக்மிணி தலை நிமிர்ந்து அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அந்தப் பார்வையின் குறிப்பை உங்களுக்கு எப்படிச் சொல்லுவேன்? பிரவாகத்தில் அகப்பட்டுக் கை அலுத்துப்போய் ஆத்தோடு போகிற ஒருவனுக்கு, தூரத்தில் கட்டை ஒன்று மிதந்து போவது போல தென்பட, அவனும் பதைபதைத்துக் கொண்டு ஆசையும் ஆவலுமாய் அதன் பக்கம் நீந்திக்கொண்டு போய், அப்பா, பிழைத்தோம்டான்னு சொல்லிக்கொண்டு அதை போய்த் தொடும்போது, ஐயோ பாவம், அது கட்டையாக இராமல், வெறும் குப்பை செத்தையாக இருந்துவிட்டால் அவன் மனசு எப்படி விண்டுவிடும், அவன் முகம் எப்படியாகி விடும் அப்படி இருந்தது ருக்மிணியின் முகமும், அந்த முகத்தில் பிரதிபிம்பித்துக் காட்டிய அவள் மனசும்.

எல்லையில்லாத துன்பம், எல்லையில்லாத கஷ்டம் அந்தப் பார்வையில் இருந்தது. அதைக் கண்டும் நாகராஜன் மௌனமாக இருப்பதைப் பார்த்து ருக்மிணி மெல்ல ஒதுங்கிக் கொண்டு, "நான் சொல்லக் கூடியது

போகிறதில்லை என்கிற வார்த்தையை நீங்கள் எனக்குச் சொல்லமாட்டேன் என்கிறீர்கள். இன்றோடு என் தலைவிதி முடிந்தது. நீங்கள் எப்போது என்னை இவ்விதம் விடத் துணிந்தீர்களோ, நான் இனிமேல் எதை நம்பிக்கொண்டு யாருக்காக, உயிரை வைத்துக் கொண்டிருப்பது? உங்கள் மீது எனக்கு வருத்தமில்லை. உங்கள் மனது இந்தக் காரியத்துக்குச் சம்மதியாது. என்னுடைய விதிவசம், என் அப்பா அம்மாவுடைய கஷ்டம், உங்களை இப்படியெல்லாம் செய்யச் சொல்கிறது, இனிமேல், ருக்மிணி என்று ஒருத்தி இருந்தாள். அவள் நம்பேரில் எல்லையில்லாத அன்பு வைத்திருந்தாள், பிராணனை விடுகிறபோது கூட நம்மையே நினைத்துக் கொண்டுதான் பிராணனை விட்டாளென்று எப்பொழு தாவது நினைத்துக் கொள்ளுங்கள். அதுதான் உங்களிடம் கடைசியாகக் கேட்டுக் கொள்வது" என்று சொல்லிக்கொண்டு நாகராஜன் காலில் விழுந்து காலை கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள். நாகராஜன் உடனே அவளைத் தரையிலிருந்து தூக்கியெடுத்து, "பைத்தியமே, அப்படி ஒன்றும் பண்ணி வைத்து விடாதே, நீ போய் விட்டால் என் ஆவியே போய்விடும். அப்புறம் யார் யாரை நினைக்கிறது? மழைத்தூறல் போடுகிறது, வானமெல்லாம் கறுகும் மென்றாகிவிட்டது. இன்னும் சற்றுப் போனால் சந்தரத்தாரையாய்க் கொட்டும் போலிருக்கிறது; வா அகத்துக்குப் போகலாம்" என்று இவள் கையைப் பிடித்துக் கொண்டு ரெண்டடி எடுத்து வைத்தாள்.

ஆகாயத்தில் சந்திரன், நட்சத்திரம், ஒன்றும் தெரியவில்லை. எங்கே பார்த்தாலும் ஒரே அந்தகாரம். சித்தைக் கொருதரம் மேகத்தை வாளால் வெட்டுகிறது போலே மின்னல் கொடிகள் ஜொலிக்கும். ஆனால் அடுத்த நிமிஷம் முன்னிலும் அதிகமான காடாந்திரமாகி விடும். பூமியெல்லாம் கிடுகிடு என்று நடுங்க ஆகாயத்தையே பிளந்து விடும்போல் இடிஇடிக்கும். காற்று ஒன்று சண்ட மாருதம்போல அடித்துக் கொண்டிருந்தது. தூரத்தில் பிரமாதமாக மழை பெய்து

கொண்டிருந்த இரைச்சல் அதிகமாகவே நெருங்கிக் கொண்டு வந்தது. இந்தப் பிரளய காலத்தைப் போல இருந்த அரவத்தில் ருக்மிணியும் நாகராஜனும் பேசிக் கொண்டுபோன வார்த்தைகள் என் காதில் சரிவரப்பட வில்லை. அவர்களும் அகத்துப் பக்கம் வேகமாகச் சென்று கொண்டிருந்தார்கள். ஒரு மின்னல் மின்னும் போது ருக்மிணி வீட்டுக்குப் போக மனமில்லாமல் பின் வாங்குவதும், ஆனால் நாகராஜன் தடுத்து முன்னால் அழைத்துச் செல்லுவது மாத்திரம் கண்ணுக்குத் தென் பட்டது. அவர்கள் வார்த்தையும் ஒண்ணும் ரெண்டுமாகத் தான் என் காதில் பட்டது. "... பிராணன் நிற்காது... அம்மாவுடைய இருதயம் திருப்தி... வெள்ளிக்கிழமை காலமே... பெண்களின்... உடைந்து விடும் ... சொல்லாதே... கொடுத்து வைத்தது தானே... அந்தப் பெண்ணை யாவது நன்றாய் வைத்துக் கொள்ளுங்கள்... மனப்பூர்த்தியாக வாழ்த்துகிறேன்... அன்றைக்குத் தெரிந்து கொள்வாய்... கடைசி நமஸ்காரம் ... வரையில் பொறுத்துக் கொள்... இந்த வார்த்தைகள் தான் இடி முழக்கத்திலும், காற்றின் அமலையிலும், மழை இரைச்சலிலும் எனக்குக் கேட்டது. மழை தாரை தாரையாகக் கொட்ட ஆரம்பித்து விட்டது. ருக்மிணியும் நாகராஜனும் என் கண்ணுக்கு மறைந்து போய் விட்டார்கள்.

ஆச்சு, அடுத்த நாள் காலமே விடிந்தது. ஆனால் ஆகாயத்திலே தெளிவு வரவில்லை. மேகங்களின் கருக்கல் வாங்கவில்லை. காற்று சமாதானம் செய்ய மனுஷியாள் இல்லாத குழந்தைபோல, ஓயாமல் கதறிக் கொண்டே யிருந்தது. என் மனசிலும் குழப்பம் சொல்லி முடியாது. எப்படி நிதானித்துக் கொண்டாலும் மனசுக்குச் சமாதானம் வரவில்லை. என்னடா இது, என்னைக்கும் இல்லாத துக்கம் இன்னைக்கு மனசில் அடைத்துக் கொண்டு வருகிறது? காரணம் ஒண்ணும் தெரிய வில்லையே' என்று நான் எனக்குள் யோசித்துக் கொண்டேயிருக்கும்போது மீனா, "என்னடியம்மா, இங்கே ஒரு புடவை மிதக்கிறது!" என்று கத்தினாள். உடனே பதட்டம் பதட்டமாய், அந்தப் பக்கம் திரும்பினேன். குளத்திலே குளித்துக்கொண்டிருந்த பெண்களெல்லோரும் அப்படியே திரும்பிப்

பார்த்தார்கள். பார்த்து விட்டு என்னமோ காதோடு காதாய் ரகசியம் பேச ஆரம்பித்துவிட்டார்கள். எனக்குப் பஞ்சப் பிராணனும் போய்விட்டது. புடவையைப் பார்த்தால் காமாட்சியம்மாள் புடவைபோல இருந்தது. சரி, அம்மா, அப்பா தலையிலே கல்லைத் தூக்கிப் போட்டுவிட்டு ருக்மிணிதான் மறுபடியும் வந்து குளத்திலே விழுந்துவிட்டாள் என்று நினைத்தேன். அதுதான் தெரியும், அப்படியே மூர்ச்சை போய் விட்டேன்.

அப்புறம் சித்த நாழி கழித்து எனக்குப் பிரக்கினை வந்தது. அதற்குள்ளே குளத்தங்கரையெல்லாம் கும்பலாய்க் கூடிப்போய் விட்டது. ஜானகியையும் ராமசுவாமி ஐயரையும் வையாதவர் இல்லை. இனிமேல் வைதா லென்ன, வையாதே போனாலென்ன? ஊரின் சோபை யையும், தாயார் தகப்பனால் ஜீவனையும், என்னுடைய சந்தோஷத்தையும் எல்லாம் ஒண்ணாய்ச் சேர்த்துக் கட்டிக் கொண்டு ஒரு நிமிஷத்தில் பறந்து போய் விட்டாளே என் ருக்மிணி! கீழே, அந்த மல்லிகைக் கொடி ஓரத்திலேதான் அவளை விட்டிருந்தார்கள். எத்தனை தடவை அந்த மல்லிகை மொக்குகளைப் பறித்தி ருக்கிறாள் அவள் பொன்னான கையாலே! குளத்தங்கரை யெல்லாம், அவள் குழந்தையாயிருக்கிறபோது அவள் பாதம் படாத இடம் ஏது, அவள் தொடாத மரமேது, செடியேது! ஐயோ, நினைக்க நினைக்க மனம் குமுறுகிறது. அந்த அழகான கைகள், அந்த அழகிய பாதங்கள் எல்லாம் துவண்டு, தோஞ்சு போய்விட்டன. ஆனால் அவள் முகத்தின் களை மாத்திரம் மாறவே யில்லை. பழைய துக்கக் குறிப்பெல்லாம் போய் முகத்தில் ஒருவித அத்தியாச் சரியமான சாந்தம் வியாபித்திருந்தது.

இதையெல்லாம் கொஞ்சந்தான் கவனிக்கப்போது இருந்தது. அதற்குள்ளே, "நாகராஜன் வ' றான், நாகராஜன் வ' றான்" என்ற ஆரவாரம் கூட்டத்தில் பிறந்தது. ஆமாம், நிஜந்தான், அவன்தான் தலைகால் தெரியாமல் பதைக்கப் பதைக்கப் ஓடி வந்து கொண்டிருந்தான். வந்துவிட்டான் மல்லிகைச் செடி யண்டை வந்ததும், கும்பலையாவது, கும்பலில் இருந்த தாயார் தகப்பனாரையாவது கவனிக்காமல், "ருக்மிணி,

என்ன பண்ணிவிட்டாய் ருக்மிணி!" என்று கதறிக் கொண்டு கீழே மரம் போல சாய்ந்துவிட்டான். கூட்டத்தில் சத்தம், கப் என்று அடங்கிப் போய்விட்டது. எல்லோரும் நாகராஜனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ரொம்ப நாழிவரைக்கும் அவன் தரையில் மூர்ச்சை போட்டே கிடந்தான். ராமசுவாமி ஐயர் பயந்து போய் அவன் முகத்திலே ஜலத்தை தெளித்து விசிறியால் விசிறிக்கொண்டிருக்கையில் அவனுக்குக் கடைசியாய் பிரக்கினை வந்தது. கண்ணை முழித்தான். ஆனால் தகப்பனாரிடத்திலே ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ருக்மிணியின் உயிரற்ற சரீரத்தைப் பார்த்து, "என்னுடைய எண்ணமத்தனையும் பாழாக்கி விட்டு 'ஜூலியெத்' மாதிரி பறந்தோடிப் போய்விட்டாயே ருக்மிணி ஸ்ரீனிவாசன் சொன்னது சரியாய்ப் போய்விட்டதே! பாவி என்னால்தான் நீ உயிரை விட்டாய், நான்தான் உன்னைக் கொலை செய்த பாதகன்! நேற்று நான் உன்னிடம் ரகசியம் முழுவதையும் சொல்லியிருந்தால் இந்தக் கதி நமக்கு இன்று வந்திருக்காதே! "குஸுமஸத்ருசம்......... ஸத்ய: பாதி ப்ரணயி ஹருதயம்"* என்கிற ஆழமான வாக்கியத்தை வேடிக்கையாக மாத்திரந்தான் படித்தேனே யொழிய அதன் சத்தியத்தை நான் உணரவில்லையே! நீயோ அவசரப்பட்டு என்னை விட்டு விட்டுப் போய் விட்டாய். எனக்கு இனிமேல் சம்சார வாழ்க்கை வேண்டாம். இதோ சன்னியாசம் வாங்கிக் கொள்கிறேன்!" என்று சொல்லிக்கொண்டே யாரும் தடுப்பதற்கு முந்தித் தான் உடுத்தியிருந்த வேஷ்டியையும் உத்தரீயத்தையும் அப்படியே தாறாய்க் கிழித்து விட்டான். அவன் தாயார் தகப்பனார் ஒருவரும் வாய் பேசவில்லை. நாகராஜனும் அவர்கள் திடுக்கிட்டதிலிருந்து சுதாரிச்சுக் கொள்ளுகிறதற்குள்ளே அவர்கள் காலில் சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்காரம் பண்ணிவிட்டு யாருடனும் பேசாமல் கௌபீனதாரி யாய்ப் புறப்பட்டுப் போய் விட்டான்.

இப்படி முடிந்தது என் ருக்மிணியின் கதை! என் அருமைக் குழந்தைகளே! பெண்கள் மனசு நோகும்படி ஏதாவது செய்யத் தோணும்போது இனிமேல் இந்தக் கதையை நினைத்துப் பார்த்துக் கொள்ளுங்கள்.

விளையாட்டுக்காகக்கூடப் பெண்ணாய்ப் பிறந்தவர்கள் மனதைக் கசக்க வேண்டாம். எந்த விளையாட்டு என்ன வினைக்குக் கொண்டுவந்து விடும் என்று யாரால் சொல்ல முடியும்?

***

* பொருள்: பெண்ணியலாரின் அன்பு நிறைந்த இருதயம் பூப் போல மிகவும் மெல்லியது; அன்புக்குக் கேடுவரின் உடனே விண்டு விழுந்து விடும்.

- காளிதாசன், மேகஸந்தேசம்



## 2. கேதாரியின் தாயார்

- கல்கி

சமீபத்தில் பத்திரிகைகளில் "அம்மாமி அப்பளம்" என்னும் விளம்பரத்தைப் பார்த்ததும், எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. உடனே பாகீரதி அம்மாமியின் ஞாபகம் வந்தது. அவளுடைய அருமைப் புதல்வனும், என்னுடைய பிராண சிநேகிதனுமான கேதாரியின் அகால மரணத்தை எண்ணிய போது, கண்ணில் நீர் ததும்பிற்று. கேதாரிக்கு இந்தக் கதி நேருமென்று யார் நினைத்தார்கள்? இதுபோன்ற சம்பவங்களை எண்ணும் போதுதான் மனித யத்தனத்தில் நமக்கு நம்பிக்கை குன்றி, விதியின் வலிமையில் நம்பிக்கை அதிகமாகிறது.

கேதாரி நோய்ப்பட்டுக் கிடந்தபோது அவனை வந்து பரிசோதனை செய்யாத டாக்டர்கள் சென்னையில் யாரும் இல்லை. ஆயினும் அவர்களில் யாரும் அவனுடைய நோயின் மூலகாரணத்தைக் கண்டுபிடிக்க வில்லை. ஏதேதோ வியாதியென்றும், 'காம்ப்ளிகேஷன்' என்றும் சொல்லி வைத்யம் செய்தார்கள். கேதாரி பிழைக்கவில்லை. அவனுடைய சிநேகிதர்களையும் உறவினர்களையும் பரிதவிக்கவிட்டு இறந்து போனான். இதுபற்றி அச்சமயம் டாக்டர்களுக்கே ஒரு கெட்ட பெயர் ஏற்பட்டிருந்தது. "என்ன வைத்திய சாஸ்திரம்? என்ன டாக்டர்கள்? எல்லாம் வெறும் படாடோ பந்தான்" என்று ஜனங்கள் சொன்னார்கள்.

கேதாரியின் விஷயத்தில் டாக்டர்கள் பேரிலாவது வைத்திய சாஸ்திரத்தின் பேரிலாவது யாதொரு தவறுமில்லை என்பதை வெளிப்படுத்துவதற்காகவே இதை நான் எழுதுகிறேன். அவனது உடல் நோயின் வேர் அவனுடைய மனோவியாதியில் இருந்தது என்பதும், அந்த மனோவியாதி நமது சமூகத்தைப் பிடித்திருக்கும் பல வியாதிகளில் ஒன்றைக் காரணமாகக் கொண்ட தென்பதும் டாக்டர்களுக்கு எப்படித் தெரியும்?

அவனுடைய அருமைத் தாயாருக்கும் இளம் மனைவிக்கும் கூட அது தெரியாத விஷயமே. அவனுடைய அத்தியந்த நண்பனான நான் ஒருவனே அந்த இரகசியத்தை அறிந்தவன். கேதாரி மரணமடைந்த புதிதில் அதைப்பற்றிப் பேசவோ, எழுதவோ முடியாத படி துக்கத்தில் ஆழ்ந்திருந்தேன் நான். இப்போது ஒரு வருஷத்துக்கு மேல் ஆகிவிட்டது. என்னுடைய ஆத்ம சிநேகிதனுக்கு நான் செய்யவேண்டிய கடமையாகக் கருதி அவனுடைய கதையை வெளியிடுகிறேன்.

ஆமாம்; ரொம்பவும் துயரமான கதைதான். நம்மில் சிலர் சோகரஸத்தை அநுபவிப்பதற்காக நாடகங்களுக்குப் போவோம்; ஆனால் வாழ்க்கையில் நம் கண்முன் நிகழும் சோக சம்பவங்களைப் பார்க்கப் பிடிக்காமல் கண்களை மூடிக் கொள்வோம். அத்தகையவர்கள் கேதாரியின் கதையைப் படிக்காமல் விடுவதே நல்லது.

கேதாரிக்கு அவனுடைய தந்தையைப் பற்றிய ஞாபகமே கிடையாது. அவன் மூன்று வயது குழந்தையாய் இருந்தபோது அவனுடைய தந்தை வீட்டை விட்டு, ஊரை விட்டு ஓடிப் போய்விட்டார். ஒரு நாடகக்காரியின் மையலில் அகப்பட்டு அவர் தம்முடைய இளம் மனைவியையும், மூன்று வயதுப் பிள்ளையையும் அநாதையாக விட்டுவிட்டுப் போனார். அந்த விவரமெல்லாம் எங்களுக்கு வெகுநாள் வரையில் தெரியாது. கேதாரிக்குக் கல்யாணப் பேச்சு நடந்த போதுதான் அவனுடைய தாயார் சொல்லித் தெரிந்து கொண்டோம்.

பெண்ணைப் போய் பார்த்துவிட்டு வரும்படி பாகீரதி அம்மாமி சொன்னபோது, "நீ பார்த்து நிச்சயம் செய்தால் சரிதான், அம்மா! ஒரு மூளிப்பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளச் சொன்னாலும் பண்ணிக் கொள்கிறேன்" என்றான் கேதாரி.

"பின் என்ன, அம்மாமி உங்களுக்கு? இந்தக் கலியுகத்தில் இந்த மாதிரிப் பிள்ளை இன்னொருவனைக் காணவே முடியாது. நீங்களே முடிவு செய்து விடுங்களேன்" என்றேன் நான்.

ஆனால் பாகீரதி அம்மாமி கேட்கவில்லை. "கேதாரி போய்ப் பெண்ணைப் பார்த்துப் பிடித்திருக்கிறது" என்று சொன்னால்தான் கல்யாணம் நிச்சயம் பண்ணுவேன்" என்று சொன்னாள். அப்போதுதான் கேதாரியின் தகப்பனார் பேச்சை அவள் எடுக்க நான் கேட்டேன்.

"இப்படியெல்லாம் பிள்ளையையும் பெண்ணையும் சம்மதம் கேட்காமல் கல்யாணம் பண்ணிப் பண்ணித்தான் குடும்பங்களில் கஷ்டம் ஏற்படுகிறது. இவனுடைய (கேதாரியினுடைய) தகப்பனார் எங்களை விட்டுவிட்டுப் போனதற்கு ஊரெல்லாம் அவரைத் திட்டினார்கள். எனக்கும் அப்போது கோபமும் ஆத்திரமும் அடைத்துக் கொண்டுதான் வந்தன. நாற்பது நாள் படுத்த படுக்கையாய்க் கிடந்தேன். ஆனால் பின்னால் ஆற அமர யோசித்துப் பார்த்ததில் அவர்மேல் ஒரு குற்றமும் இல்லையென்று தோன்றிற்று. என்னைக் கல்யாணம் செய்து கொள்வதில் அவருக்கு இஷ்டமே இல்லையாம். அப்படிச் சொல்லவும் சொன்னாராம். ஆனால் பெரியவர்கள் பலவந்தப்படுத்திக் கல்யாணம் செய்தார்களாம். ஏதோ ஐந்தாறு வருஷம் பல்லைக் கடித்துக் கொண்டு குடும்பம் நடத்தினோம். அப்புறம் அந்தக் கூத்தாடிச்சி வந்து சேர்ந்தாள்; போய்விட்டார்.

இப்படிப் பாகீரதி அம்மாமியே அந்தப் பேச்சை எடுத்தபோது, நானும் பக்குவமாகச் சிற்சில கேள்விகளைப் போட்டு மற்ற விவரங்களையும் அறிந்தேன். கேதாரியின் தகப்பனார் சுந்தரராமையர் பார்ப்பதற்கு வாட்டசாட்டமாய் ஆள் நன்றாயிருப்பார். ரொம்ப நன்றாய்ப் பாடுவாராம். அப்போது திருமங்கலத்தில் தபாலாபீஸில் அவருக்குக் குமாஸ்தா உத்தியோகம். ரங்கமணி என்னும் பெயர்பெற்ற நாடகக்காரி அவ்வூரில் நாடகம் நடத்திக் கொண்டிருந்தாள். ஒரு நாள் அயன் ராஜபார்ட் போடுகிறவனுக்கு ரொம்ப உடம்பு சரிப்படவில்லை யென்றும் அன்று அநேகமாய் நாடகம் நடை பெறாதென்றும் செய்தி வந்தது. கேதாரியின் தகப்பனாருக்கு நாடகம் என்றால் பித்து. நாடகம் பார்த்துப் பார்த்து எல்லா நாடகங்களும் நெட்டுருப் பாட்டுக்கள் தலைகீழ்ப்பாடம். ஆகவே இவர் போய்

"நான் ராஜபார்ட் போட்டுக் கொள்கிறேன்" என்றார். சில பாட்டுக்களும் பாடிக்காட்டினார். ரங்கமணி சம்மதித்தாள். நாடகம் நடந்தது. எல்லோரும் அதிசயிக்கும்படி கேதாரியின் தகப்பனார் நடித்தார். அம்மாமிக்குக்கூட அது பெருமையாய் இருந்தது.

அப்புறம் திருமங்கலத்தில் அந்தக் கம்பெனி இருந்த வரையில் அவர்களுடனேயே இருந்தார். வேலையை ராஜிநாமா கொடுத்துவிட்டாரென்றும், அந்த நாடகக் காரி அவரை மயக்கிவிட்டாரென்றும், தன்னுடன் அழைத்துக் கொண்டு போகப்போகிறாள் என்றும் ஊரிலே பேசிக்கொண்டார்கள். ஆனால் பாகீரதி அம்மாள் அதை யெல்லாம் நம்பவில்லை. கடைசியில் நாடகக் கம்பெனி ஊரைவிட்டுப் போயிற்று. அதற்கு மறுநாள் சுந்தரராமையரையும் காணவில்லை. நாடகக் கம்பெனி இலங்கைக்குப் போயிற்றென்றும், அங்கே போய் இவரும் சேர்ந்து கொண்டாரென்றும் பின்னால் தகவல் தெரிய வந்தது.

அதற்குப் பிறகு அவரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. மேற்படி நாடகக் கம்பெனியார் இலங்கை, பர்மா, சிங்கப்பூர், பினாங்கு முதலிய வெளி நாடுகளிலேயே சுற்றிக் கொண்டிருந்ததாகத் தெரிந்தது. பலவருஷங்களுக்குப் பிறகு இரண்டொரு தடவை சென்னை நகருக்கும் வந்திருந்தார்கள். ஆனால் பாகீரதி அம்மாமி அதற்குள் அவரைப்பற்றி எண்ணுவதையே விட்டுவிட்டாள். இப்போது அவளுடைய ஆசை முழுவதையும் கேதாரியின் மேல் வைத்திருந்தாள்.

சுந்தரராமையர் ஓடிப்போன செய்தியறிந்து பாகீரதி அம்மாமியின் தாய்தந்தையர்கள் திருமங்கலத்துக்கு வந்து அவளைத் தங்களுடன் கிராமத்துக்கு அழைத்துப் போனார்கள். அவர்கள் சொற்ப குடித்தனக்காரர்கள். பாகீரதியைத் தவிர அவர்களுக்கு வேறு பிள்ளைகுட்டி கிடையாது. கிராமத்தில் ஐந்தாறு வருஷங்கள் இருந்தார்கள். அப்புறம் கேதாரியைப் படிக்க வைப்பதற்காகத் திருச்சிராப்பள்ளிக்கு வந்தார்கள்.

நேற்று நடந்ததுபோல் தோன்றுகிறது. அப்போது திருச்சிராப்பள்ளியில் மாதுர்பூதம் ஸ்டோரில் நானும் என் பெற்றோர்களும் குடியிருந்தோம். நான் முதலாவது பாரத்தில் படித்துக்கொண்டிருந்தேன். ஸ்டோரில் எங்களுக்கு எதிர்வீடு சில நாளாகப் பூட்டிக் கிடந்தது. அன்றைக்கு யாரோ புதிதாகக் குடிவரப் போகிறார்கள் என்று கேள்விப்பட்டு ஆவலுடன் அவர்களுடைய வரவை எதிர்பார்த்திருந்தேன். ஒரு தாத்தா, ஒரு பாட்டி, ஒரு அம்மாமி, ஒரு பையன் - இவர்கள் பழைய தகரப் பெட்டிகளுடனும் மூட்டை முடிச்சுகளுடனும் வந்து சேர்ந்தார்கள். அந்தப் பையன் கையில் தங்கக் காப்புப் போட்டுக் கொண்டும், தலை பின்னிக் கொண்டும், குல்லா வைத்துக் கொண்டும் நின்றது எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது.

அந்தப் பையன்தான் கேதாரி. அவனுடன் முதல் தடவை பேசின உடனேயே எனக்குப் பிடித்துப் போயிற்று. பட்டிக்காட்டிலிருந்து வந்தவனாதலால் எதைப் பார்த்தாலும் அவனுக்கு ஆச்சரியமாய் இருந்தது. பைப்புக் குழாயில் இருந்து தண்ணீர் கொட்டுவதைக் கண்டு இடிஇடியென்று சிரித்தான். காலையில் தாயுமான ஸ்வாமிக்குத் திருமஞ்சனம் கொண்டு வருவதற்காகப் போன யானையை அவன் பார்த்த பார்வையில், விழி பிதுங்கிவிடும் போலிருந்தது. ஓயாமல் அது என்ன, இது என்ன என்று கேட்டுக்கொண்டேயிருப்பான். நானும் சலிக்காமல் பதில் சொல்லி வந்தேன்.

நான் படித்த அதே பள்ளிக்கூடத்தில் அதே வகுப்பில் கேதாரியைச் சேர்த்தார்கள். நாங்கள் இணைபிரியாத சிநேகிதர்கள் ஆனோம். நிஜத்தைச் சொல்லிவிடுகிறேன்; படிப்பிலே நான் கொஞ்சம் சுமார்தான். மற்றபடி விளையாட்டு வம்பு முதலியவை களில் நான்தான் முதல். அவனோ படிப்பில் முதல்; மற்றவைகளில் ரொம்ப சுமார். எல்லாப் பள்ளிக் கூடங்களிலும் இந்த மாதிரி படிப்பில் கெட்டிக்காரனாக உள்ள பையனைப் பரிகாசம் பண்ணி உபத்திரப் படுத்துவதற்குச் சில காலிகள் இருப்பார்கள். ஆனால் எங்கள் பள்ளிக் கூடத்தில் எனக்குப் பயந்து கேதாரியின்

வழிக்கு ஒருவரும் போவதில்லை. அவர்கள் திருச்சிக்கு வந்து மூன்று வருஷத்திற்கெல்லாம், தாத்தா காலமானார். அதற்குள் அவர் கையில் இருந்த பணமும் செலவழிந்து போயிற்று. கேதாரிக்கு 'ஸ்காலர்ஷிப்' கிடைத்திருந்த படியால், சம்பளச் செலவு கிடையாது. ஊரில் விளைந்து வரும் நெல் சாப்பாட்டிற்குப் போதும். ஆனால் வீட்டு வாடகைக்கும், மேல் செலவுக்கும் என்ன செய்வது? அம்மாமியும் பாட்டியும் அப்பளம் இட்டு விற்க ஆரம்பித்தார்கள். அதென்னமோ, சில சமயம் முன்பின் தெரியாதவர்களிடம் கூட நமக்குப் பிரியம் ஏற்பட்டுவிடுகிறது. அவர்களை முதல் முதலில் நாம் பார்க்கும் வேளையைப் பொறுத்ததோ என்னமோ, தெரியவில்லை. பாகீரதி அம்மாமியிடம் என் சொந்தத் தாயாரைவிட அதிகப்பிரியம் எனக்கு ஏற்பட்டிருந்தது. அக்கம்பக்கத்தார்கள் அவளைப்பற்றி 'வாழா வெட்டி' என்று அவமதிப்பாகப் பேசுவதுண்டு. இதெல்லாம் அவளிடம் எனக்கு இருந்த பிரியத்தை அதிகமே யாக்கிற்று. என் பள்ளிக்கூடத்துச் சிநேகிதர்களுக் கெல்லாம் சொல்லி, பாகீரதி அம்மாமியின் அப்பளங்களை நானே ஏராளமாய் விற்றுக் கொடுத்திருக்கிறேன்.

பாட்டியும் கொஞ்ச காலத்துக்குப் பிறகு இறந்து போய்விட்டாள். தாயும் பிள்ளையும் அதே வீட்டில் இருந்துவந்தார்கள். கேதாரி, அவனுடைய தாயார் அவன் விஷயத்தில் பட்ட கஷ்டத்துக்கெல்லாம் பாத்திரமாய் நடந்து கொண்டான். ஒவ்வொரு வகுப்பிலும் முதன்மையாகத் தேறிவந்து; கடைசியில் பி.ஏ. பரீட்சையில் முதலாவதாகத் தேறினான். அந்த சந்தோஷத்தில், நான் அவ்வருஷம் 'கோட்' அடித்த வெட்கத்தைக்கூட அதிகமாய் உணரவில்லை.

கேதாரி காலேஜிக்குப் போனதிலிருந்தே பெண்ணைப் பெற்றவர்கள் அவனுடைய தாயாரைப் பிய்த்து எடுத்த வண்ணமிருந்தார்கள். இன்னொருவர் இன்னொரு வரானால் "அப்பளம் இடும் தொல்லை ஒழிந்தது" என்று எண்ணி, ஏதாவது ஒரு பெண்ணைக் கேதாரியின் கழுத்தில் கட்டியிருப்பார்கள். ஆனால் பாகீரதி அம்மாமி வாழ்க்கை என்னும் பள்ளிக் கூடத்தில் கஷ்டமான பாடங்களைப் படித்து அறிவு பெற்றவள். "பி.ஏ. முடிகிற

வரையில் கல்யாணப் பேச்சே கூடாது" என்று பிடிவாதமாய்ச் சொல்லி வந்தாள்.

ஆகவே, இப்போது கேதாரி பி.ஏ. தேறியதும், கல்யாணத்தைப் பற்றி யோசிக்க வேண்டியதாயிற்று. மணிபுரம் பண்ணையார் என்று கேள்விப் பட்டிருக்கிறீர்கள் அல்லவா? அவர் அப்போது எங்கள் காலேஜ் பழைய மாணவர் சங்கத்தின் அக்கிராசன ராயிருந்தார். ஒவ்வொரு வருஷமும் கேதாரி முதலாவதாகத் தேறி முதல் பரிசுகள் பெற்று வருவதைக் கவனித் திருந்தார். பையனுடைய முகவெட்டு நடை உடை பாவனை எல்லாம் அவருக்கும் பிடித்திருந்தன. ஆகவே தம்முடைய பெண்ணை அவனுக்குக் கொடுப்பதென்று பேச்சுத்தொடங்கினார். பையனைக் கேட்டதில், அம்மாவைக் கேட்க வேண்டுமென்று சொல்லிவிட்டான். பாகீரதி அம்மாமி இவ்வளவு பெரிய சம்பந்தம் கிடைக்கப் போகிறதை எண்ணியபோது பிரமித்துப் போய்விட்டாள். ஆனாலும் காரியத்தில் கண்ணாயிருந்தாள். இன்னொரு ஸ்திரீயாயிருந்தால் "ஐயாயிரம் வேணும்; பத்தாயிரம் வேணும்" என்று கேட்டிருப்பார்கள். பாகீரதி அம்மாமியோ "பணங்காசு ஒன்றும் வேண்டாம்; கல்யாண சீர்வகையறா எல்லாம் உங்கள் இஷ்டம்; பையனைச் சீமைக்கு அனுப்பி ஐ.ஸி.எஸ். படிக்க வைப்பதற்கு மட்டும் ஒப்புக் கொண்டால் போதும்" என்றாள்.

இந்த மாதிரி எண்ணம் அம்மாமிக்கு உண்டென்று எனக்கு முன்னாலேயே தெரியும். ஏனென்றால், ஐ.ஸி.எஸ்.ஸுக்குப் போவது பற்றிய விவரங்களை யெல்லாம் ஒரு நாள் என்னை அவள் கேட்டதுண்டு. அக்கம்பக்கத்தில் எல்லாரும் அதிசயப்பட்டார்கள்; சிலர் அம்மாமியை வையக்கூட வைத்தார்கள். "பார், என்ன நெஞ்சழுத்தம் இவளுக்கு? ஒரு பிள்ளை; அதைச் சீமைக்கு அனுப்புகிறாளே?" என்றார்கள்.

பண்ணையார் நரசிம்மய்யர் ரொம்ப வைதிகம். ஆகையால் முதலில் தயங்கினார். கடைசியில், பெரிய சாஸ்திரிகள் எல்லாருடனும் யோசித்து, "சாஸ்திரங்களில் சமுத்திரப் பிரயாணத்துக்குப் பிராயச்சித்தம் இருக்கிறது"

கென்னமோ "ஒரு ஸ்திரீக்குள்ள மனோதிடம் நமக்கு வேண்டாமோ?" என்ற எண்ணத்தினாலேதான் அவர் சம்மதித்தார் என்று தோன்றியது.

இதற்குப் பிறகுதான், கேதாரியைப் போய்ப் பெண் பார்த்துவிட்டு வரும்படி அம்மாமி சொன்னது. நானும் கூடப்போயிருந்தேன். கேதாரி தன் தாயிடம் வைத்திருந்த நம்பிக்கை எவ்வளவு நியாயமானது என்று விளங்கிற்று. கிளி என்றால் கிளி, பெண் அவ்வளவு அழகாயிருந்தாள் பதின்மூன்று பதினாலு வயது இருக்கலாம்.

அந்தக் கதையெல்லாம் இப்போது வளர்த்துவதில் பயன் என்ன? சுருக்கிவிடுகிறேன். கல்யாணம் சிறப்பாக நடந்தது. அடுத்த வருஷம் கேதாரி இங்கிலாந்துக்குப் பிரயாணமானான். பம்பாய் வரையில் நான் சென்று கப்பல் ஏற்றிவிட்டு வந்தேன்.

பாகீரதி அம்மாள் தங்கள் வீட்டிலேயே வந்திருக்க வேண்டும் என்று மணிபுரத்தார் எவ்வளவோ வருந்தி அழைத்தார்கள். அம்மாமி கேட்கவில்லை. அவளுடைய சித்தி ஒருத்தி இரண்டு குழந்தைகளை அநாதையாய் விட்டுவிட்டு இறந்து போய்விட்டாள். அவர்களைக் கிராமத்திலிருந்து தருவித்துத் தனியாக ஒரு வீட்டில் ஜாகை ஏற்படுத்திக் கொண்டு அவர்களைப் பராமரித்து வந்தாள். ஆனால் சம்பந்திகளின் கௌரவத்தையும் மற்ற விஷயங்களையும் உத்தேசித்து அப்பளம் இட்டு விற்பதை மட்டும் நிறுத்திவிட்டாள்.

கேதாரி சீமைக்குப் போய் ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகு, மணிபுரம் மிராசுதார் வீட்டிலிருந்து ஆள் வந்து என்னைக் கூப்பிட்டான். அவ்வாறே போயிருந்தேன். நரசிம்மய்யர் என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். அது இரங்கூனிலிருந்து சுந்தர ராமைய்யர் என்பவரால் எழுதப்பட்டது. தன்னுடைய புதல்வனுக்கு இவர்கள் பெண்ணைக் கொடுத்திருப்பதாக அறிந்து சந்தோஷப்படுவதாகவும் திருச்சியிலிருந்து சமீபத்தில் இரங்கூனுக்கு வந்த ஒருவர் மூலம் சகல விவரமும் தெரிந்து கொண்டதாகவும் ஜன்ம தேசம் வந்து

எல்லாரையும் பார்க்க விரும்புவதாகவும் அதற்குப் பிரயாணச் செலவுக்காகப் பணம் அனுப்ப வேண்டு மென்பதாகவும் எழுதப்பட்டிருந்தது.

"சங்கரா, இது என்ன நிஜமாயிருக்குமா?" என்று நரசிம்மய்யர் கேட்டார்.

"நிஜமாயிருக்கலாமென்றேதோன்றுகிறது. எல்லாவற்றிற்கும், அம்மாமியைக் கேட்டுக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கடிதத்தை எடுத்துக் கொண்டு சென்றேன்.

அம்மாமியிடம் கடிதத்தைக் கொடுத்தேன். அவள் ஒரு வேளை அழுது கண்ணீர்விட்டுத் தடபுடல் செய்வாளோ என்று நான் பயந்ததெல்லாம் வீண் எண்ணம் என்று தெரிந்தது. தன்னுடைய ஏக புதல்வனைச் சீமைக்கு அனுப்பி வைக்கும்படி நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்ட அம்மாமியல்லவா? கடிதத்தைப் படித்துவிட்டு, "இது அவருடைய கையெழுத்துத் தான்" என்றாள். பிறகு மௌனமாய் யோசனையில் ஆழ்ந்தவள் போல் இருந்தாள். இரண்டொரு தடவை பெருமூச்சு மட்டும் வந்தது. ஒரு துளி கண்ணீர் கூட வரவில்லை.

அம்மாமி அவசரமாய் உள்ளே எழுந்துபோய்ப் பெட்டியிலிருந்த பண நோட்டுக்களை எடுத்து வந்து என்னிடம் கொடுத்தாள். எண்பது ரூபாய் இருந்தது.

"சங்கரா, நான் அப்பளம் இட்டுச் சேர்ந்த பணத்தில் மீதி இது. அவருக்கு என் பேரால் அனுப்பு. இந்த வீட்டு விலாசம் கொடுத்து நேரே இங்கே வரச்சொல்லு" என்றாள்.

அம்மாமியின் குரல் கொஞ்சம் கம்மியிருந்தது. அவ்வளவுதான் எனக்கோ கண்ணில் அருவிபோல ஜலம் வந்தது.

மேல் சம்பவங்களைப் பற்றி நினைத்தாலே எனக்கு என்னமோ செய்கிறது; கைகூட கிடு கிடென்று நடுங்குகிறது.

பத்து நாளைக்கெல்லாம் மணியார்டர் திரும்பி வந்துவிட்டது. மணியார்டரை எந்த விலாசத்துக்கு அனுப்பினோமோ அந்த வீட்டிலிருந்து ஒருவர் மணியார்டர் வருவதற்குமுன் சுந்தரராமய்யர் காலஞ் சென்றுவிட்டதாகவும், அநாதைப் பிரேத சம்ஸ்காரம் செய்யப்பட்டதாகவும் கடிதம் எழுதியிருந்தார்.

பதினெட்டு வருஷமாகக் கண்ணால் பாராத புருஷனுக்காகப் பாகீரதி அம்மாள் துக்கம் காத்தாள். பத்தாம் நாள் பிராம்மண சாதியின் வழக்கமான அலங்கோலங்கள் அம்மாமிக்கும் செய்யப்பட்டன.

கேதாரிக்கு இதைப்பற்றி ஒன்றும் எழுதக்கூடா தென்றும், திருப்பி ஊருக்கு வந்தபிறகு தெரிவித்தால் போதுமென்றும் அம்மாமி கண்டிப்பாய்ச் சொல்லி விட்டாள்.

காலம் எப்படியோ சென்றது. நானும் மலையைக் கெல்லி எலியைப் பிடித்து பி.ஏ.பாஸ் செய்து, நான் படித்த பள்ளிக்கூடத்திலேயே உபாத்தியாயர் ஆனேன். கேதாரி ஊருக்குத் திரும்பும் காலம் சமீபித்தது.

எதிர்பார்த்தது போலவே அவன் மிகச் சிறப்புடன் ஐ.ஸி.எஸ். தேறினான். அவனுடைய தகப்பனாரின் மரணத்தைப் பற்றியும், மற்ற விவரங்களைப் பற்றியும் அவனை திடுக்கிடச் செய்யாத முறையில் கடிதம் எழுதி, அது பம்பாயில் அவன் கையில் கிடைக்கும்படி அனுப்பி யிருந்தோம். ஆனால் அவனுக்கிருந்த அவசரத்தில், கப்பலிலிருந்து நேரே இரயிலுக்கு வந்து விட்டானா தலால், மேற்படி கடிதம் அவன் கையில் சேரவில்லை யென்று பின்னால் தெரியவந்தது.

அவன் வரும் விவரம் தந்தியில் தெரிவித்திருந் தானாதலால் வீட்டு வாசலில் தயாராய்க் காத்துக் கொண்டிருந்தேன்.

என் கழுத்தைக் கட்டிக்கொண்டு இழுத்தவண்ணம் அவசரமாய் உள்ளே போனான். தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த அம்மாமியின் மேல் அவன் பார்வை விழவேயில்லையோ, அல்லது விழுந்தும் அடையாளம்

தெரியவில்லையோ, நான் அறியேன். அவன் பாட்டுக்கு "அம்மா! அம்மா!" என்று கூப்பிட்டுக்கொண்டு ஆவலோடு உள்ளே சென்றான்.

அம்மாமியின் கண்ணில் நீர் வந்ததை முதன்முதலாக அப்போதுதான் நான் பார்த்தேன்.

"அடே! கேதாரி! என்னடா இது? அம்மா இதோ இருக்கிறாள்; எங்கேயோ தேடிக்கொண்டு போகிறாயே? என்றேன்.

கேதாரி திரும்பி வந்தான். வெள்ளைப் புடவை யணிந்து மொட்டைத்தலையை முக்காட்டால் மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்த பாகீரதி அம்மாமியைச் சற்று நேரம் உற்று பார்த்தான்.

"ஐயோ! அம்மா" என்று பயங்கரமாக ஒரு கூச்சல் போட்டுத் தொப்பென்று கீழே உட்கார்ந்தான். தலையைக் கைகளில் பிடித்துக் கொண்டான்.

கேதாரிக்குக் கடுமையான ஜுரம் அடித்துக் கொண்டிருந்தது. திருச்சிராப்பள்ளியில் அவனை வந்து பார்க்காத டாக்டர்கள் இல்லை; அவனுக்குச் செய்யாத சிகிச்சைகள் ஒன்றும் பாக்கி கிடையாது. ஒன்றும் பயன்படவில்லை.

அவனுடைய உடம்பு கொதித்துக் கொண்டி ருந்ததைப் போல் உள்ளமும் கொதித்துக் கொண்டி ருந்தது. ஒரே நினைவு, ஒரே ஞாபகந்தான். நான் தனியாய் அவனுடன் இருக்க நேர்ந்துவிட்டால் போதும், உடனே அது வெளியே வந்துவிடும்.

"சங்கரா! அது என்ன சாஸ்திரமடா அது? அநாதையாய் விட்டுப் பதினெட்டு வருஷம் திரும்பிப் பாராமல் இருந்த புருஷன் செத்ததற்காகத் தலையை மொட்டையடிக்கச் சொல்லும் சாஸ்திரம்!! அதைக் கொண்டுவாடா, தீயில் போட்டுக் கொளுத்துவோம்" என்று உணர்ச்சியுடன் கத்துவான்.

"இதோ பார், சங்கர்! என் தாயார் ரொம்ப புத்திசாலி. இந்த முட்டாள்தனத்துக்கு ஒருநாளும்

உட்பட்டிருக்க மாட்டாள். எல்லாம் என்னால் வந்தது தான். நான் பெரிய இடத்தில் வைதிகக் குடுக்கைகளின் வீட்டில் கல்யாணம் செய்து கொண்டே னல்லவா? அவர்களுடைய ஏச்சுக்குப் பயந்துதான் அம்மா இந்த அலங்கோலத்துக்குச் சம்மதித்திருக்க வேண்டும்" என்பான்.

ஒருநாள் வாசலில் இரண்டு கூலி வேலைக்காரர்கள் பேசிக்கொண்டு போனார்கள். ஒருவன் "அண்ணே! இன்று காலை புறப்படும் போது ஒரு மொட்டைப் பாப்பாத்தி எதிரில் வந்தாள். அதுதான் வேலை அகப்படவில்லை" என்று சொன்னது கேதாரியின் காதில் விழுந்துவிட்டது.

"சங்கர்! கேட்டாயா? என் தாயார் முகத்தில் விழித்தால் சகல பீடைகளும் நீங்குமென்று சொல்வார் களடா! அவளும் இப்போது மொட்டைப் பாப்பாத்தி தானே? அபசகுணம் தானே?" என்று புலம்பினான்.

எவ்வளவோ சமாதானம் சொல்லித் தேற்றினேன். ஆனாலும், அந்தப் பேச்சை மட்டும் விடுவதில்லை.

"இதைக் கேள். சங்கர்! உத்தியோகமும் ஆயிற்று, மண்ணும் ஆயிற்று, நான் மட்டும் பிழைத்து எழுந்தே னானால் ஒரே ஒரு காரியந்தான் செய்யப் போகிறேன். பிராமண ஸ்தீரிகள் புருஷனை இழந்தால் தலையை மொட்டையடிக்கும் வழக்கத்தையொழிக்க ஒரு பெரிய கிளர்ச்சியை நடத்தப் போகிறேன். இந்தத் தனிக் கௌரவம் நம்முடைய சாதிக்கு மட்டும் வேண்டாம்" என்றான். ஆனால் ஐ.ஸி.எஸ் வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவன் இந்தமாதிரி அற்ப காரியங்களில் இறங்குவது யமதர்மனுக்கே விருப்பமில்லை போலிருக்கிறது. கேதாரி உடம்பு குணமடையாமலே, சீமையிலிருந்து திரும்பி வந்த இருபத்தோராம் நாள் காலஞ் சென்றான்.

இந்தப் பரிதாப வரலாற்றில் சொல்லவேண்டியது, இன்னும் ஒன்றுதான் பாக்கியிருக்கிறது. கேதாரியின் மாமனார் அவனுடைய புகைப்படம் ஒன்று இருந்தால் கொண்டு தரும்படி எனக்குச் சொல்லியிருந்தார். நானும்

அவனும் சேர்ந்து எடுத்துக் கொண்ட படம் ஒன்று என்னிடம் இருந்தது. அதிலிருந்து அவனுடைய படத்தைமட்டும் தனியாக எடுக்கச் செய்து சட்டம்போட்டு எடுத்துக் கொண்டு போனேன். அப்போது அவர்களுடைய வீட்டில் தற்செயலாய்க் கேதாரியின் மனைவியைக் காணநேரிட்டது. அவளைப் பார்த்ததும் என் உடம்பு சிலிர்த்தது. அவளைக் “கிளி” என்று சொன்னேனல்லவா? அந்தக் கிளிக்கு இப்போது மொட்டையடித்து முக்காடும் போட்டிருந்தார்கள்!



# 3. சிற்பியின் நரகம்

**- புதுமைப்பித்தன்**

சூரியாஸ்தமன சமயம். காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தில் என்றையும் விட அதிக நெருக்கடி கறுத்து ஒடுங்கிய மிசிர தேச வாசிகளும், வெளுத்து ஒடுங்கிய கடாரவாசிகளும், தசை வலிமையின் இலட்சியம் போன்ற கறுத்த காப்பிரிகளும், வெளுத்த யவனர்களும், தென்னாட்டுத் தமிழும், வடநாட்டுப் பிராகிருதமும் - எல்லாம் ஒன்றிற் கொன்று முரண்பட்டுக் குழம்பின. சுங்க உத்தியோகஸ்தர்கள் அன்னம் போலும். முதலைகள் போலும் மிதக்கும் நாவாய்களிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பண்டங்களையும், வேலைக்காரர்களையும் பொற் பிரம்பின் சமயோசிதப் பிரயோகத்தால் தணிக்கை செய்து கொண்டிருந்தனர். அரசனுக்குக் கூடாரத்தி லிருந்து வெள்ளை யானைகள் கொண்டு வரப்பட்டி ருக்கின்றன. அவற்றைப் பார்க்கத்தான் என்றுமில்லாத கூட்டம்!

அஸ்தமன சூரியனின் ஒளியே எப்பொழுதும் ஒரு சோக நாடகம். கோவில் சிகரங்களிலும், மாளிகைக் கலசங்களிலும் தாக்கிக் கண்களைப் பறிப்பது மட்டு மல்லாது, கடற்கரையில் கரும்பாறையில் நிற்கும் துவஜஸ் தம்பத்தின் மீது, கீழ்த்திசை நோக்கிப் பாயும் பாவனையில் அமைக்கப்பட்ட பொன் முலாம் பூசிய வெண்கலப் புலியின் முதுகிலும் வாலிலும் பிரதிபலிப்பது அவ்விடத்திற்கே ஒரு மயக்கத்தைக் கொடுத்தது.

இந்திர விழாவின் சமயத்தில் மக்களின் வசதிக்காக அமைக்கப்பட்ட ஸ்தான கட்டத்தின் படிக்கட்டில், பைலார்க்கஸ் என்ற யவனன் கடலை நோக்கியபடி உட்கார்ந்திருந்தான். நீண்ட போர்வையான அவனது டோகா காற்றில் அசைந்து படபடவென்றடித்து, சில சமயம் அவனது தாடியையும் கழுத்துடன் இறுகப் பின்னியது. பெரிய அலைகள் சமயா சமயங்களில்

அவனது பின்னிய தோல் வார்ப் பாதரட்சையை நனைத்தன. அவ்வளவிற்கும் அவன் தேகத்தில் சிறிதாவது சலனம் கிடையாது. மனம் ஒன்றில் லயித்து விட்டால் காற்றுத் தான் என்ன செய்ய முடியும். அலைதான் என்ன செய்ய முடியும்?

பைலார்க்கஸின் சிந்தனை சில சமயம் அலைகளைப் போல் குவித்து விழுந்து சிதறின. கதவுகள் அவனை வெறியனைப் போல் விழிக்கச் செய்தன.

திடீரென்று, "சிவா!" என்ற குரல் ஒரு தமிழ்நாட்டுப் பரதேசி!

"யவனரே! உமது சித்தம் உமக்குப் பிரியமான ஒன்றுமற்ற பாழ்வெளியில் லயித்ததோ? நான் நேற்றுச் சொன்னது உமக்குப் பதிந்ததா? எல்லாப் மூலசக்தியின் திருவிளையாடல், அதன் உருவம்! கொல்லிப் பாவையும் அதுதான்; குமரக் கடவுளும் அதுதான்! எல்லாம் ஒன்றில் லயித்தால்....?"

"உமது தத்துவத்திற்குப் பதில் ஒரு கிண்ணம் திராட்சை மது எவ்வளவோ மேலானது. அதுவும் ஸைப்பிரஸ் தீவின் திராட்சை... அதோ போகிறானே அந்தக் காப்பியும் ஏதோ கனவை நம்புகிறான். உமது முதல் சூத்திரத்தை ஒப்புக் கொண்டால், உமது கட்டுக்கோப்பில் தவறு கிடையாதுதான்... அதை எப்படி ஒப்புக் கொள்ள முடியும். ஒவ்வொருவனுடைய மனப் பிராந்த்திக்கும் தகுந்தபடி தத்துவம்... எனக்கு அது வேண்டாம். நாளங்காடியில் திரியும் உங்கள் கருநாடிய நங்கையும் மதுக் கிண்ணமும் போதும்..."

"சிவ! சிவ! இந்த ஜைனப் பிசாசுகள் கூடத் தேவலை. கபாலி வெறியர்கள் கூடத் தேவலை.... உம்மை யார் இந்த அசட்டு மூட்டையைக் கட்டிக் கொண்டு யவனத்தி லிருந்து வரச் சொன்னது?"

"உம்மைப் போன்றவர்கள் இருக்குமிடத்தில் நான் இருந்தால்தான் அர்த்தமுண்டு எங்கள் 'ஜூபிட்டரின் அசட்டுத்தனத்திற்கும் உங்கள் கந்தனின் அசட்டுத் தனத்திற்கும் ஏற்றத் தாழ்வில்லை...' என்று சிரித்தான் பைலார்க்கஸ்.

“சிவ! உம்மிடம் பாசத்தை வைத்தான், அதுவும் அவன் விளையாட்டு தான்!” என்று தம் சம்புடத்திலிருந்த விபூதியை நெற்றியில் துலாம் பரமாக அணிந்து கொண்டார் பரதேசி.

“நாளங்காடிப் பக்கம் போகிறேன், வருகிறீரா?” என்றார் மீண்டும் அச்சந்நியாசி.

“ஆமாம்! அங்கே போனாலும் சாத்தானைப் பார்க்கலாம். அவனிடம் பேசுவதில் அர்த்தமுண்டு.... அவனுக்குத் தெரியும் சிருஷ்டி ரகசியம்....”

“ஓஹோ! அந்தச் சிலை செய்கிற கிழவனையா? உமக்கு ஏற்ற பைத்தியக்காரன்தான்... ஏதேது! அவனே அதோ வருகிறானே!” என்றார் சாமியார்.

பைலார்க்கஸ் எழுந்து அவனை யவன முறையில் வணங்கினான்.

சாத்தானுக்கு எண்பது வயதிருக்கும்; தொண்டு கிழவன். ஆனால் வலிமை குன்றவில்லை; கண்களின் தீட்சண்யம் போகவில்லை. பிரமன் மனித வடிவம் பெற்றது போல் காணப்பட்டான். அவனும் கை கூப்பி வணங்கி, “பைலார்க்கஸ், உன்னைத்தான் தேடி வந்தேன்!”

வீட்டிற்கு வருகிறாயா? எனது லட்சியம் இன்று தான் வடிவம் பெற்றது...?” என்று ஒரு குழந்தையின் உற்சாகத்துடன் கூவியழைத்தான்.

“இவரைத் தெரியுமா? பாண்டிய நாட்டு, உங்கள் பரதேசி, அவர் தத்துவங்களை எல்லாம் என்னுள் திணித்துப் பார்த்தார்.... பைலார்க்கஸிடம் முடியுமா?” என்று கேலியாகச் சிரித்தான் யவனன்.

“சுவாமி வரணும். இன்று என் குடிசையில் அமுது படி கழிக்க வேண்டும்” என்று பரதேசியைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான் சாத்தான்.

“என்ன, என்ன! நீயுமா?” என்றான் பைலார்க்கஸ்.

“பைலாக்கஸ்! நீ நிர்சுவரவாதியாக இருப்பதில் எனக்கு வருத்தமில்லை; மற்றவரைக் கேலி செய்யாதே....

“அதற்குத்தான் நான் பிறந்திருக்கிறேன். அப்பா! எனது வேலை அது....”

“சரி, வாருங்கள் போகலாம், சுவாமி வரணும்!” என்று இருவரையும் இரட்டை மாட்டு வண்டிக்கு அழைத்துச் சென்றான் சிற்பி.

வண்டியின் கதி மெதுவாகத்தான் இருக்க முடிந்தது. எதிரே யானைகளும்,பொதி கழுதை, பொதி மாடுகளும், துறைமுகத்தை நோக்கி வரும் நேரத்தில் தீப்பந்தம் பிடித்துச் செல்லும் மக்களை விலக்கிக் கொண்டு வண்டி செல்வது கடினந்தான். திடீரென்று அரசாங்க உத்தியோகஸ்தர்களின் ரதம், யானை வந்து விட்டால் தெருவே தூளிபடும். முரசொலி இருந்து என்ன பயன்? அந்த உப்பு வண்டி ஓட்டிச் செல்லும் பெண் சிறிது தவறினால் ரதத்தின் அடியில் தான்! சாத்தனின் வண்டி அதில் முட்டிக் கொள்ளவிருந்தது.

“தெய்வச் செயல்!” என்றான் சாத்தன்.

“உன் சிருஷ்டி சக்தி!” என்றான் பைலார்க்கஸ். வேறு எதையோ நினைத்துக் கொண்டு,

“பைலார்க்கஸ், உனது பேச்சு எனது பெருமையைச் சாந்தி செய்யலாம். நான் எத்தனை நாள் கஷ்டப் பட்டேன்? அது உனக்குத் தெரியுமா? நீ நேற்றுப் பிறந்தவன்.. கூத்து!.... ‘அதில் எவ்வளவு அர்த்தம்! மனிதனுக்குத் தெரிந்ததெல்லாம். தெரிய வேண்டுவதெல்லாம்.... இந்தப் பிரபஞ்சமே. பைலார்க்கஸ், நீ நினைப்பது போல் வெறும் பாழ் வெளியன்று; அர்த்தமற்ற பேய்க் குழப்பம் அன்று... இருபது வயசிருக்கும்; அப்போ ஒரு தரம் பாண்டிய நாட்டுக்குப் போயிருந்தேன்.... சிற்பத்தைப் பார்க்க வேண்டுமானால் கொல்லிப்பாவையைப் பார்க்க வேண்டும். அங்கே தான், ஒரு மறவன், நாகன், ஒரு கூத்தில் அபிநயம் பிடித்தான். அந்தக் கால் வளைவு, அதை அதிலே பிடித்தேன்.... உலகத்தின் அர்த்தத்தை - ஒவ்வொன்றாக, படிப்படியாக வளர்ந்தது.... அந்த மலையத்து நடிகைதான் முகத்தின் சாந்தியை, அந்த அபூர்வமான புன்சிரிப்பை, அர்த்தமற்ற அர்த்தத்தை - பைலார்க்கஸ், உனக்கென்ன! நீ

கேலிக்காரன் - உபநிஷத்தில் தேடியலைந்தேன்.... ஹிமயத்தில் தேடியலைந்தேன்... சாந்தி அந்த இரவு - என் மனைவி அங்கயற்கண்ணி இறந்த அன்று கிட்டியது. பிறகு வெண்கலக் கலப்பிற்கு என்ன பரீட்சை! என்ன ஏமாற்றம்!... ஆசை தான் வழிகாட்டியது அந்த ரூப சௌந்தரியம் பெறுவதற்கு எத்தனை ஆட்களைத் தேடினேன்!...

அதன் ஒரு சாயை.... நீலமலைக் கொடுங்கோலன்- பத்து வருஷங்களுக்கு முன்பு சிரச்சேதம் செய்யப் பட்டானே - அவனுடைய இடைதுவளுதலில் கண்டேன்... தெய்வம் ஒன்று உண்டு... அதன் அர்த்தத்தை என் சிலை உணர்த்த, முடித்தது என பூர்வ ஜன்மப் பலன்.... இந்தக் கைகளால் பின்னாலிருந்து ஓர் அர்த்தமுள்ள வஸ்து தூண்டாவிட்டால்.... அதைச் சாதிக்க முடியும்?''

"நீதான் சாதித்தாய்! நீ தான் பிரம்மா! உன் சாதனைதான் அது சிருஷ்டி மயங்காதே! பயப்படாதே! நீதான் பிரம்மா! சிருஷ்டித் தெய்வம்?'' என்று பைலார்க்கஸ் அடுக்கிக் கொண்டே போனான்.

சாமியார் சிரிப்புடன் வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

வண்டியும் நாளங்காடியை அடைந்து கீழ்ச் சதுக்கத்தின் வழியாக ஒரு சந்தில் திரும்பி, ஒரு வீட்டின் முன் நின்றது.

மூவரும் இறங்கி வாசற்படியில் ஏறினர். ஒரு யவனப் பெண் வந்து காலைக் கழுவினாள். ஒரு காப்பிரி, மரியாதையாகக் குனிந்து, கலிங்க வஸ்திரத்தினால் துடைத்தான்.

'சுவாமி, வரவேண்டும்! பைலார்க்கஸ். இப்படி வா!'' என்று இருவரையும் அழைத்துக் கொண்டு ஓர் அறைக்குள் சென்றான் சாத்தான்... அவன் வயதிற்கு அவ்வளவு துடிதுடிப்பு ஆச்சரியமானதுதான்!

"மூபாங்கோ, தீபம்!'' என்று கத்தினான். அந்தக் காப்பிரி ஒரு கைவிளக்கை எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். ஜன்னல் இல்லாத அந்த அறையிலும் காற்று

நூலிழை போல் வந்து உள்ளத்தையும் உடலையும் மயக்கியது.

"இங்கு கூடவா விளக்கு இல்லை! திரையை ஒதுக்கு! ஸ்வாமி, பைலார்க்கஸ், இது தான் என் வாழ்க்கை?" என்று திரையை ஒதுக்கினான்.

இருவரும் ஸ்தம்பித்து நின்றனர். அந்த மங்கிய தீபவொளியில் ஒற்றைக் காலைத் தூக்கி நடிக்கும் பாவனையில், ஆள் உயரத்தில் மனித விக்ரகம்! விரிந்த சடையும் அதன் மீது விளங்கும் பிறையும், விரிந்து சின்முத்திரைகளைக் காண்பிக்கும் கைகளும், அந்த அதரத்தில் தோன்றிய அபூர்வப் புன்னகையும் மனத்தில் அலை மேல் அலையாகச் சிந்தனைக் கற்பனைகளைக் கிளப்பின. மூவரும் அந்தச் சிலையேயாயினர். சிலையின் ஒவ்வொரு வளைவிலும், ஒவ்வொரு அங்கத்திலும் என்ன ஜீவத் துடிதுடிப்பு! சந்நியாசி, தம்மையறியாமல் பாட ஆரம்பித்தார்...

பனித்த சடையும், பவளம்போல்
மேனியும், பால் வெண்ணீறும்,
குனித்த புருவமும், கொவ்வைச்
செவ்வாயும், குமிண் சிரிப்பும்,
இனித்தங்கசிய எடுத்த பொற்
பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே!

"சுவாமி, அப்படி சொல்லக் கூடாது?"

"சாத்தா! அவர் சொல்வது தான் சரி! இது கலையா! இது சிருஷ்டி! இதை என்ன செய்யப் போகிறாய்?"

"அரசன் கோவிலுக்கு.... இதென்ன கேள்வி?"

"என்ன! இந்த அசட்டுத்தனத்தை விட்டுத் தள்ளு.... அரசனுடைய அந்தப்புர நிர்வாண உருவங்களின் பக்கலில் இதை வைத்தாலும் அர்த்தம் உண்டு.... இதை உடைத்துக் குன்றின் மேல் எறிந்தாலும் அந்தத் துண்டுகளுக்கு அர்த்தம் உண்டு; ஜீவன் உண்டு..." என்று வெறி பிடித்தவன் போல் பேசினான் பைலார்க்கஸ்.

களுக்கு யவனந்தான் சரி! அகஸ்தூரஸா - அந்த உங்கள் சாம்ராட் 'அவனுக்குத்தான் சரி உன் பேத்தல்!"

"சாத்தனாரே! உமது இலட்சியத்திற்கு அரசன் கோரிக்கை தான் சரியான முடிவு இனி ஏன் இந்த ஜைனர்கள் தலை தூக்கப் போகிறார்கள்... !" என்றார் சாமியார்.

"இந்த வெறிபிடித்த மனிதர்களைவிட அந்தக் கடலுக்கு எவ்வளவோ புத்தியிருக்கிறது" என்று கோபித்துக் கொண்டு பைலார்க்ஸ் வெளியேறி விட்டான்.

அன்று தான் கும்பாபிஷேகம். சிலையைப் பிரதிஷ்டை செய்த தினம், சோழ தேசத்திலேயே அது ஒரு பெரும் களியாட்டம் என்று கூற வேண்டும். சாத்தானுக்கு இலட்சியம் நிறைவேற்றிற்று. அன்று பைலார்க்கஸ் தனது குதூகலத்தில் பங்கெடுத்துக் கொள்ள உயிருடன் இல்லையே என்ற வருத்தம் சாத்தனுக்கு அதிகம்.

புதிய கோவிலிலிருந்து வீடு சேரும் பொழுது அர்த்த ஜாமமாகி விட்டது.

வயதின் முதிர்ச்சி அன்று தான் அவனைச் சிறிது தளர்த்தியது. சோர்ந்து படுத்தான். அயர்ந்து விட்டான்...

அப்பா! என்ன ஜோதி! அகண்டமான எல்லையற்ற வெளி! அதிலே சாத்தானின் இலட்சியம், அந்த அர்த்தமற்ற, ஆனால் அர்த்த புஷ்டி மிகுந்த, ஒரு புன்சிரிப்பு! மெதுவான ஹிருதய தாளத்தில் நடனம்! என்ன ஜீவன்! என்ன சிருஷ்டி!

திடீரென்று எல்லாம் இருண்டது! ஒரே கன்னக் கனிந்த இருள்! ஹிருதய சூனியம் போன்ற பாழ் இருட்டு!

பிறகும் ஒளி... இப்பொழுது தங்கத்தினாலான கோவில்! கண்கள் கூசும்படியான பிரகாசம்!... கதவுகள் மணியோசையுடன் தாமே திறக்கின்றன. உள்ளே அந்தப் பழைய இருள்!

சாத்தான் உள்ளே செல்லுகிறான். இருட்டின் கரு போன்ற இடம் அதில் மங்கிய தீபவொளி தோன்றுகிறது!

என்ன! இதுவா பழைய சிலை உயிரில்லை! கவர்ச்சிக்கும் புன்னகையில்லையே!.... எல்லாம் மருள்...மருள்.!

அந்தகார வாசலில் சாயைகள் போல் உருவங்கள் குனிந்தபடி வருகின்றன. குனிந்தபடி வணங்குகின்றன.

"எனக்கு மோட்சம்! எனக்கு மோட்சம்!" என்ற எதிரொலிப்பு அந்தக் கோடிக்கணக்கான சாயைகளின் கூட்டத்தில் ஒருவராவது சிலையை ஏறிட்டுப் பார்க்கவில்லை! இப்படியே தினமும்...

நாட்கள், வருஷங்கள், நூற்றாண்டுகள் அலை போல் புரள்கின்றன. அந்த அனந்த கோடி வருஷங்களில் ஒரு சாயையாவது ஏறிட்டுப் பார்க்க வேண்டுமே!

"எனக்கு மோட்சம்..!" இது தான் பல்லவி, பாட்டு, எல்லாம்!

சாத்தான் நிற்கிறான்...

எத்தனையோ யுகங்கள்! அவனுக்கு வெறி பிடிக்கிறது. "உயிரற்ற மோட்சச் சிலையே! உன்னை உடைக்கின்றேன்! போடு! உடை! ஐயோ, தெய்வமே! உடைய மாட்டாயா! உடைந்துவிடு! நீ உடைந்து போ! அல்லது உன் மழு என்னைக் கொல்லட்டும். அர்த்தமற்ற கூத்து..!" இடி இடித்த மாதிரி சிலை புரள்கிறது. சாத்தனது ஆலிங்கனத்தில், அவன் ரத்தத்தில் அது தோய்கிறது. ரத்தம் அவ்வளவு புனிதமா! பழைய புன்னகை!..

சாத்தான் திடுக்கிட்டு விழித்தான். வெள்ளி முளைத்து விட்டது. புதிய கோவிலில் சங்க நாதத்துடன் அவனது குழம்பிய உள்ளம் முட்டுகிறது.

"என்ன பேய்க் கனவு, சீ!" என்று விபூதியை நெற்றியில் அணிந்து கொள்கிறான்.

"பைலார்க்கஸ் பாவம் அவன் இருந்தால்..." சாத்தானின் மனம் சாந்தி பெறவில்லை.



# 4. மாங்காய்த் தலை

- ந.பிச்சமூர்த்தி

இரண்டு பிச்சைக்காரர்கள் அந்த ஊருக்கு வந்திருந்தார்கள். மனிதனுடைய தர்ம சிந்தனையைத் தூண்டி வளர்த்து நிலைக்கச் செய்யும் பிரசாரத்தை ஒரு மாதமாக ஒருவன் செய்து வந்தான். நாச்சி ஒரு குரங்காட்டி. அவனிடம் இருந்தது பெண் குரங்கு. குரங்குக்குப் பாவாடை, ரவிக்கை எல்லாம் உண்டு. பெண் குரங்காக இருந்தாலும் லங்காப் பட்டணம் தாண்டும்; மாடு மேய்க்கும்; பிசாசு ஆடும்; மாமியார் வீட்டுக்குத் தண்ணீர் கொண்டு வரும். அப்பொழுது நடுவழியில் பானையைப் போட்டு உடைத்து விடும் காட்சி மிகவும் தமாஷாய் இருக்கும். அந்த வேடிக்கைக்கு அடுத்த படியாகக் குரங்கு கையை நீட்டும் அதில் காசு நிரம்பாமல் போகாது.

மற்றொரு பிச்சைக்காரன் ஊருக்கு வந்து மூன்று மாதங்கள் ஆயின. ஆனால் அவனிடம் குரங்கு இல்லை. குரங்கைவிட விநோதமான ஒன்றை வைத்திருந்தான். அதை ஒரு பிராணி என்று தான் சொல்ல வேண்டும். நாலடி உயரந்தான் இருக்கும். தலை மாங்காய்த்தலை; தேங்காய்த்தலை என்றும் வைத்துக் கொள்ளலாம். சாமியார் மாதிரி மொட்டை உடம்பெல்லாம் விபூதியைத் தண்ணீரில் கரைத்துப் பூசி இருக்கும். நெற்றியை அடைத்து ஒரு பெரிய தென்கலை நாமம் போட்டிருக்கும். வயிற்றை அடைத்தும் ஒன்றிருக்கும். உடம்பெல்லாம் சதைப்பற்று இல்லாமல் ஓணான் மாதிரி இருக்கும். இடுப்பில் ஒரு லங்கோடு, அது பேசாது. ஏதோ சத்தம் செய்யும். அந்தப் பிராணியை எல்லாரும் பார்த்து இருக்கலாம். அதைக் கடைக்குக் கடை கொண்டு போய் நிறுத்தினாலே போதும்; கும்பல் சேர்ந்து விடும். குரங்கு மாதிரி சேஷ்டை செய்து கத்தினால் கேட்பானேன்? கடை வியாபாரத்துக்கு வந்த இடைஞ்சலைத் தவிர்க்க வென்றே கடைக்காரன் காசு கொடுத்து விரட்டி

விடுவான். இந்த விநோதப் பிராணியை வைத்திருக்கும் பேச்சிக்கு என்ன பஞ்சம்? குரங்காட்டியை விடப் பணக்காரன்.

இந்த இரண்டு பிச்சைக்காரர்களும் ஆற்றங்கரை மண்டபத்தில் தான் தங்கி இருந்தார்கள். பகல் முழுவதும் ஊர் சுற்றிப் பிச்சை எடுப்பது, சாயங்காலமாக ஆற்றங்கரைக்கு வந்து சுள்ளி, சிப்பிகளைப் பொறுக்கிச் சோறு பொங்கித் தின்பது, பிறகு உலகத்தின் மாயையை பற்றிப் பாடுவது, பேசுவது இது தான் நிகழ்ச்சி முறை. ஆனால் ஒரு வித்தியாசம்; பேச்சி, சோறு தின்ற பிறகு நாள் தவறாமல் கஞ்சாக் குடிப்பான் பணக்காரப் பிச்சைக்காரன் அல்லவா? குரங்காட்டி இரண்டிலே மூன்றிலே பீடி குடிப்பான். மற்றபடி அவர்கள் ஒற்றுமையாகத் தான் இருந்தார்கள்.

இந்த ஒற்றுமைக்கு உலை வைத்தது மாங்காய்த் தலை. அதற்குப் பேச வாய் இல்லாவிட்டாலும் தின்ன வயிறு உண்டு என்பது பேச்சிக்குத் தெரியவில்லை. அதனால் தான் வினை விளைந்தது. மாங்காய்த் தலையைக் கடைத்தெரு வழியாக ஒரு தரம் அழைத்துச் சென்றால் ஒரு பத்து வாழைப்பழமோ எதுவோ கிடைக்காமல் இருக்காது. இதெல்லாம் மாங்காய்த் தலைக்கு இனாம் என்ற உண்மை அந்தப் பிராணிக்கு எப்படியோ தெரியும். பேச்சி மட்டும் உணரவில்லை. இல்லாவிட்டால் அவ்வளவையும் அந்தப் பிராணிக்கே கொடுத்து விடமாட்டானா? அவன் அப்படிச் செய்வதில்லை. ஒன்றிரண்டு கொடுப்பான். இன்னொன்று என்று பிராணி கையை நீட்டினால் அதன் கையைப் பிடித்துக் தள்ளுவான். பிடிவாதம் பிடித்தால் அடித்து விடுவான். இருந்த போதிலும் பழத்தையெல்லாம் பேச்சியால் தின்று விட முடியுமா?

இந்த வரும்படியைச் சாக்கிட்டுத்தான் வெற்றிலை பாக்குக் கடைச் சூரப்பன் பழக்கமானான். கடைத்தெரு மூலையில் ஒரு பெட்டிக்கடையில் சாமான் ஒன்றும் அதிகமாக இல்லை. வெற்றிலை, பாக்கு, பழம், புகையிலை, சுருட்டு, பீடி, சர்பத் பாட்டல், பெட்ரூம்

விளக்கு, தெருப்புழுதி இவ்வளவுதான். ஊருக்கு வந்த புதிதில், மாங்காய்த் தலையைக் கூட்டிக் கொண்டு சாயங்காலமாக ஆற்றங்கரைக்குத் திரும்பும் பொழுது பேச்சியிடம் இருபது வாழைப்பழம் இருந்தன. என்ன செய்வதென்று புரியவில்லை. சூரப்பன் பெட்டிக்கடை தென்பட்டதும், "ஐயா, வாழைப்பழம் வேணுமா?" என்று கேட்டான். பிச்சைக்காரனையும் மாங்காய்த் தலையையும் ஏற இறங்கப் பார்த்துவிட்டுச் சூரப்பன் வேண்டாமென்று தலையை ஆட்டினான்.

"குடுக்கிறதைக் குடுங்க"

"ஒரு அணாத் தருவேன்."

"காலணா சேர்த்துக் குடுங்க."

வாங்கும் பொருளின் விலை சூரப்பனுக்குத் தெரியும். அதில் என்ன லாபம் வரும் என்றும் தெரியும். ஆகையால் ஒரு காலணா சேர்த்துக் கொடுத்து வாங்கிக் கொண்டான்.

அன்று முதல் பேச்சி, சூரப்பன் கடைக்குச் சாயங்காலமாக வரத் தவறுவதில்லை. என்ன சாமான் அன்றன்று கிடைக்கிறதோ அதைச் சூரப்பன் கடையில் போட்டு விட்டு ஓரணாவோ இரண்டணாவோ வாங்கிக் கொண்டு போய் விடுவான்.

இந்தப் பழக்கத்தினால் ஒரு பேரங்கூட அவர்களுக்குள் தகைந்து விட்டது. பேச்சி, தான் தினம் சம்பாதிக்கும் சாமான்களைக் கடையில் போடுவதுடன் சம்பாதிக்கும் காசையும் கொடுத்து விட வேண்டியது. சூரப்பன் காண்டிராக்டராக ஒரு நாளைக்கு ஒன்றரை ரூபாய் வீதம் அவனுக்குக் கொடுத்து விட வேண்டியது. தினசரி சம்பாத்தியம் கூடுதலாய் இருந்தாலும் குறைவாய் இருந்தாலும் பேச்சிக்கு அதில் சம்பந்தம் இல்லை. பேச்சிக்கு இந்த ஒப்பந்தம் பிடித்துவிட்டது. அப்படித் தான் இரண்டு மாதமாக நடந்து வந்தது.

குரங்காட்டி வந்த பிறகு தான் சிக்கல் உண்டாயிற்று. குரங்காட்டி தினசரி வேடிக்கை காட்டி விட்டுச் சாயங்காலமாக ஆற்றங்கரைக்கு வருவான். ஓர் ஆணியில்

குரங்கைக் கட்டிப் போட்டுவிட்டு அன்றைக்குக் கிடைத்த பட்டாணிக் கடலையையோ பழத்தையோ அதன் முன் போடுவான். அது தின்று கொண்டிருக்கும். அவன் சோறாக்கத் தொடங்குவான். அநேகமாக இதே வேளைக்குப் பேச்சி தன் வேடிக்கைப் பிராணியுடன் திரும்பி விடுவான். வந்தவுடனே குளித்துவிட்டுச் சோறாக்கும் வேலையைக் கவனிப்பான். மாங்காய்த்தலை விட்ட இடத்திலேயே நின்று கொண்டிருக்கும்; அல்லது பழந்துணி மாதிரி சவுங்கிப் போய்க் கிடக்கும்.

குரங்காட்டி வந்த ஒரு வாரம் வரையில் எவ்வித மாறுதலும் இல்லை. அதற்குப் பிறகு ஒரு நாள், பேச்சி, சோறாக்கி முடித்து விட்டு மாங்காய்த் தலையை நோக்கி வந்தான். மாங்காய்த் தலையைக் காணவில்லை. ஒரு விநாடி திகைத்துப் போய்விட்டான். பிறகு மண்டபத்துக் கோடித்திருப்பத்தில் குரங்காட்டி சோறாக்கும் இடத்துக்குப் போய் பார்த்தான். மாங்காய்தலை குரங்கின் அருகில் உட்கார்ந்து பட்டாணிக் கடலையைத் தின்று கொண்டிருந்தது. பேச்சி, மாங்காய்த் தலையைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு தன்னிடத்துக்குத் திரும்பினான். இந்த மாதிரி சம்பவம் அதற்குப் பிறகு சகஜமாகி விட்டது.

இதிலிருந்து பேச்சிக்கும் நாச்சிக்கும் இடையே உள்ளூற ஒரு புகைச்சல் உண்டாகிவிட்டது. ஏதோ மந்திரம் போட்டு மாங்காய்த் தலையை நாச்சி கலைப்பதாகப் பேச்சி நினைத்தான். நாச்சிக்கு வேறு விதத்தில் குறுகுறுப்பு உண்டாயிற்று. குரக்குக்குப் போட்டிருக்கும் உணவுப் பொருள்களை எல்லாம் தினம் தவறாமல் மாங்காய்த்தலை தின்று விடுவதில் நாச்சிக்கு மனம் இல்லை. அதற்குக் கிடைப்பதை அதற்குப் போடாமல் கஞ்சாப் புகையாக்கிவிடும் வேலையை அவன் வெறுத்தான். ஆனால் அதற்காகச் சண்டை போட முடியுமா?

எனவே குரங்காட்டி மண்டபத்துக்கு வருவதைத் திடீரென்று நிறுத்தி விட்டான். ஆற்றுக்குத் கீழண்டைப் பக்கத்திருந்து பிரிந்து செல்லும் ஒரு வாய்க்காலின்

கரையில் அரசமரத்தடியில் தங்க ஆரம்பித்தான். குரங்காட்டி ஊரை விட்டுப் போய்விட்டான் போல் இருக்கிறது என்று தான் பேச்சி முதலில் நினைத்தான். ஒரு வாரத்துக்குப் பிறகு தற்செயலாகப் பேச்சி, மாங்காய்த் தலையுடன் வாய்க்கால் கரை ஓரமாக வர நேர்ந்த பொழுது தான் உண்மை தெரிந்தது.

"ஊரை விட்டுப் போயிட்டேன்னு அல்ல நினைச்சேன்! அண்ணன் தம்பி சண்டை வந்தாச் செய்வாங்களே. அந்த மாதிரி செஞ்சுட்டியே!"

"நானும் நீயும் அண்ணன் தம்பியா?" என்று நாச்சி சிரித்தான். குரங்காட்டி உண்மையைச் சொல்லவில்லை. வெறுமனே பேசி மெழுகி விட்டான்.

அதற்குப் பிறகு பல தரம் அந்த வழியே மாங்காய்த் தலையை அழைத்துக் கொண்டு பேச்சி போய் வந்தான். குரங்காட்டி அங்கே தான் இருந்தான். மாங்காய்த் தலைக்கு அந்த வழியே போவதில் விருப்பம் இருப்பது போல் கூடப் பேச்சிக்குப்பட்டது. காரணம் மட்டும் விளங்கவில்லை.

பத்து நாள் கழிந்திருக்கும். வழக்கம் போல் பகலில் சம்பாதித்து விட்டுச் சாயங்காலமாகப் பேச்சி ஆற்றங்கரை மண்டபத்தில் சோறாக்கித் தின்றான். பிறகு மாங்காய்த் தலைக்கும் போட்டுவிட்டுத் தூங்கிப் போனான்.

மறுநாள் காலை எழுந்தபோது திக் என்றது. மாங்காய்த் தலையைக் காணவில்லை. முதல் இல்லாவிட்டால் எப்படித் தொழில் செய்ய முடியும்? மண்டபத்தை விட்டு இறங்கிச் சுற்றுமுற்றும் பார்த்தான்; காணவில்லை. ஒரு யோசனை தோன்றிற்று. வேகமாக வாய்க்கால் கரைக்குப் புறப்பட்டான். நினைத்தபடிதான் இருந்தது. குரங்கின் அருகில் மாங்காய்த்தலை வாழைப்பழத் தோலை தின்று கொண்டிருந்தது. பேச்சிக்கு அளவு கடந்த கோபம் வந்து விட்டது.

"ஏண்டா திருட்டுப் பயலே, ஏண்டா இவனைக் களவாண்டுக்கிட்டு வந்தே?" என்று குரங்காட்யைச்

சண்டை பிடிக்கத் தொடங்கினான். குரங்காட்டி பதிலுக்குச் சண்டை பிடிக்கவில்லை.

"நானா களவாண்டுக்கிட்டு வந்தேன்? பைத்தியமா? நேத்து ராத்திரி பாதி ஜாமத்திலே நான் எளுந்திரிச்சேன். பார்த்தால் என் குரங்குக்குப் பயக்கத்திலே இந்த மாங்காய்த்தலையும் படுத்துக் கிடந்துச்சு. அது எப்போ வந்துச்சு, எப்படி வந்துச்சுன்னு எனக்குத் தெரியாது. சத்தியமாச் சொல்றேன். நீ அழைச்சுக்கிட்டுப் போயிடு..."

இதைக் கேட்டதும் பேச்சிக்கு கெட்ட கோபம் வந்து விட்டது. ஒரு சுள்ளியை எடுத்து மாங்காய்த் தலையை இரண்டு வாங்கு வாங்கினான். மாங்காய்த்தலை முகத்தைச் சுளித்துக் கொண்டு ஏதோ ஒரு மாதிரியான சத்தத்தைக் கிளப்பிற்று. அதிகமாக அடிக்கவும் பயம், மாங்காய்த்தலையின் கையைப் பேச்சி பிடித்தான். அது நகரவில்லை; நகருவதாகவும் தெரியவில்லை. இழுத்துக் கொண்டு நடக்க முயன்றான். தொப்பென்று கீழே விழுந்து படுத்துக் கொண்டு விட்டது. தூக்கி நிறுத்த முயன்றான். கையைக் கடித்தது.

பேச்சிக்குப் பெருத்த பயம் உண்டாக்கிவிட்டது. மெதுவாக தாஜா செய்து பார்த்தான். மாங்காய்த் தலை கடிக்கும் ரீதியிலேயே இருந்தது.

"இதுக்கு என்னவோ கோவம்" என்றான் நாச்சி.

"அது என்ன எழவோ! எனக்கு ஒண்ணுமே புரியல்லே. ஆறு வருசத்துக்கு முந்தி ஒரு பொம்புள்ளே வந்து சேந்தா. அவளோட மவன் இது. இதை அவளுக்குப் பிடிக்கவே இல்லே. சொல்லாமெ கொள்ளாமெ ஒரு நாள் ராத்திரி இதை விட்டுட்டு ஓடிப் போயிட்டா. அப்பவே பிடிச்சு இதை வச்சுப் புழைச்சுகிட்டு வாறேன். அதுக்கு முந்தி ஒன்னைப்போல நானும் குரங்காட்டிதான். இப்போ என் பொழப்பு என்ன ஆறது?"

"ஆனா இது ஒன் மவன் இல்லையா? அதுதான் ஒட்டாமெ இருக்குது. போவுது; என்ன மூழ்கிப்போச்சு"

"அது தான் புரியல்லே. நல்லா இருந்தா நாலு போட்டு இழுத்து விட்டு போயிடலாம். அடிச்சா வாயை விட்டுச்சுன்னா? என் பொழப்பு என்ன ஆவறது?"

"நான் ஒண்ணு சொல்றேன்; கேளு. என் குரங்கை உன்கிட்டக் குடுத்துடறேன். பொழப்பு நடந்து போகும், கஞ்சாப் பிடிக்க முடியாது. நான் இதை வச்சுகிடறேன்."

பேச்சி யோசித்தான். வேறு வழி தோன்றவில்லை. குரங்கைப் பிடித்துக் கொண்டு போய்விட்டான்.

அன்று சுற்றினதில் இரண்டு படி அரிசியும் நாலணாக் காசும் பேச்சிக்குக் கிடைத்தன. வழக்கம் போல் சூரப்பன் கடைக்கு முன்பு போய் நின்றான்.

கடைக்காரன் திகைப்புடன் பார்த்தான். "ஏண்டா குரங்காட்டி ஆயிட்டே? அது எங்கே?" என்று கவலையுடன் விசாரித்தான்.

பேச்சி நடந்ததையெல்லாம் சொல்லிவிட்டு அரிசியையும் காசையும் கீழே வைத்தான்.

சூரப்பன் பெரிய கில்லாடி, இனிமே பழைய பேரம் நடக்காது. தம்பி, அது மாங்காய்த் தலையோடே போயிடுச்சு. ஓம் பேரிலே ஏழு ரூபாய் அதிகம் பத்து ஆயிடுச்சு. அதுக்காக இதை இன்னிக்கு எடுத்துக் கிடறேன். பாக்கியைக் கொண்ணாந்து வச்சுட்டு ஊருக்குப் போ என்று சொல்லிவிட்டுக் குரங்கைப் பிடித்துப் பந்தற்காலில் கட்டிப் போட்டான்.

"நான் பணம் கொடுக்கணுமா? இருக்காதே" என்றான் பேச்சி திகிலுடன்.

"அப்போ நான் பொய்க்கணக்கு எழுதி வச்சிருக்கிறேன் என்கிறாயா?"

சூரப்பனைப் பற்றிப் பேச்சிக்கு நன்றாகத் தெரியும்.

"அவ்வளவு இருக்காதேன்னுதான் சொன்னேன். நீங்க தான் சொல்றீங்களே, பணத்தைக் குடுத்துட்டு ஊருக்குப் போறேன்' ஹனுமார் அறியச் சத்தியம்."

"அந்தச் சத்தியம் கித்தியம் எல்லாம் நமக்கு வேணாம். மரியாதையாகக் காசைக் கீழே வச்சுடு. அவ்வளவு தான்."

"நான் எப்படிச் செய்வேனுங்க? குரங்கைக் கூடப் பந்தக்காலிலே கட்டிப் போட்டுட்டீங்களே!" என்று சொல்லிக் கொண்டே கையெடுத்துக் கும்பிட்டான்.

"அப்போ நான் சொல்றதைக் கேளு. நாளைக்கு நான் ஒரு மனு எழுதித் தாரேன், பெரிய மேஸ்டிரிட் ஆபீசுக்கு நாளைக் காலை பத்து மணிக்கு வா, நானும் வாறேன். பிராது குடுக்கிற பேரெல்லாம் குடுக்கலாம்ன்னு வில்லை போட்ட சேவுகள் ஒத்தன் கத்துவான். அப்போ இந்தக் கடுதாசை எஜமான் கிட்டக் கொண்டு போய்க் கொடு. பிறகு அங்கேயே இரு எஜமான் கூப்பிட்டுக் கேப்பாரு. என்கிட்ட இருந்த ஆளைத் திருடிக்கிட்டுப் போயிட்டான்; என் பொழப்பே மண்ணாயிடுச்சுன்னு அழு. அப்புறம் பாறேன்."

"பிச்சைக்காரனுக்கு இதெல்லாம் என்னாத்துக்குங்க?"

"அப்பொ மாங்காய்த் தலைக்குப் போடற நாமத்தை எனக்குப் போடப் பாக்கிறே!"

பேச்சிக்கு ஒன்றும் பதில் சொல்லத் தெரியவில்லை. "காலையில் கடைக்கு வறேனுங்க. நீங்க சொல்றதைச் செய்யறேன்."

"சரி, குரங்கைப் பிடிச்சுகிட்டுப் போ" என்று சூரப்பன் உத்தரவு கொடுத்தான்.

பேச்சி குரங்கைப் பிடித்துக் கொண்டு வாய்க்கால் கரை வழியே போனான். வாய்க்கால் கரையில் அரசமரத் தடியில் நாச்சியையோ மாங்காய்த் தலையையோ காணவில்லை. வியப்பாக இருந்தது. அப்படியே தன் மண்டபத்துக்குக் குரங்கை அழைத்துக் கொண்டு போய்ச் சோறாக்கித் தின்றான். பிறகு அவர்கள் எங்கே போய் இருப்பார்கள் என்ற கவலை பேச்சியைத் தொளைத்தது. இரவில் ஒரு தரம் போய்ப் பார்த்தான். அப்பொழுதும் காணவில்லை. பிச்சைக்காரர்கள் தங்கக் கூடிய ஒவ்வோர் இடத்தையும் சலித்துப் பார்த்தான். எங்கும் காணவில்லை. மிகவும் அயர்ந்து திரும்பும் போது ஒரு பெருமாள் மாட்டுக்காரன் விஷயத்தைச் சொன்னான். அவர்கள் காலையில் அடுத்த ஊருக்கு ரெயிலில் போய்விட்டதாகச் சொன்னான்.

இந்தத் தகவலைக் கேட்டதும் பேச்சிக்கு உயிரே போய்விட்டது. நேரே கடைத் தெருவுக்குப் போய்ச் சூரப்பனிடம் விஷயத்தைத் தெரிவித்தான்.

"என்னைப் பிடுச்சுக்கோன்னு திருடன் எதிர்த்தாப் போல உக்காந்திருப்பானா? காலையிலே மனுக் குடுக்கணும்னேன். சரி இன்னே இப்போ அழிச்சுப் பேசத் தந்திரம் பண்றே" என்று சூரப்பன் உறுமினான்.

"ஐயோ சாமி, அதெல்லாம் எனக்குத் தெரியாதுங்க. நீங்க சொல்றபடி நாளைக்கு வந்தூடறேனுங்க" என்று கும்பிடு போட்டு விட்டுப் போய்விட்டான்.

மறுநாள் காலை பத்து மணிக்குப் பெரிய 'மேஸ்டிரிட்' கோர்ட்டு வாசலில் சூரப்பனும் பிச்சைக் காரனும் கூட்டத்தில் தென்பட்டார்கள். பேச்சி கையில் ஒரு மனு இருந்தது. கோர்ட்டுச் சேவகன் வழக்கம் போல் மும்முறை கூவினான். பேச்சி விழித்துக் கொண்டு இருந்தானே ஒழிய நகரவில்லை. சூரப்பன் முதுகில் கையைக் கொடுத்து முன்னே தள்ளிவிட்ட பிறகு தான் பேச்சி விழிப்படைந்து மனுவைக் கொண்டு போய் மாஜிஸ்டிரேட்டிடம் கொடுத்தான். மாஜிஸ்டிரேட் அவனை ஆச்சரியத்துடன் பார்த்து விட்டு மனுவை வாங்கி வைத்துக் கொண்டார். பிறகு மாஜிஸ்டிரேட் ஒவ்வொரு நபராகக் கூப்பிட்டு ஏதோ கேள்விகள் கேட்பதும் உத்தரவு போடுவதுமாக இருந்தார். பேச்சிக்கு ஒன்றும் விளங்கவில்லை. சுவரில் சாய்ந்தாலுங்கூடக் குற்றம் என்று நினைத்துக் கொண்டோ என்னவோ கால் கடுக்க நின்று கொண்டிருந்தான்.

மாஜிஸ்டிரேட் பேச்சியைக் கூப்பிட்டார். பேச்சி கைகால் நடுங்க முன்னே போய் நின்றான். மாஜிஸ்டிரேட் கேள்விகள் கேட்க இவன் பதில் சொல்லிக் கொண்டு வந்தான். சூரப்பன் கோர்ட்டுக்கு வெளியே ஜன்னலண்டை நின்று கொண்டு இதை எல்லாம் கவனித்துக் கொண்டிருந்தான். ஆகையால் நடந்ததை நடந்தபடி சொல்லாமல் சூரப்பன் சொல்லிக் கொடுத்த பாடத்தை பேச்சி ஒப்பித்தான். மாஜிஸ்டிரேட் போலீஸ்காருக்கு ஆங்கிலத்தில் ஏதோ உத்தரவிட்டார். சூரப்பனுக்கோ

பேச்சிக்கோ ஒன்றும் புரியவில்லை. வில்லைச் சேவகன் பேச்சியை வெளியே போகலாம் என்று ஜாடை காட்டினான். பேச்சி வெளியே வந்து வாதாமரத்தடியில் சூரப்பனுடன் நின்று பேசிக் கொண்டிருந்தான். அப்பொழுது இரண்டு போலீஸ்காரர்கள் வந்து விஷயத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். சொன்னதெல்லாம் சூரப்பன்தான். "உடனே ரெயிலில் புறப்பட்டுப் போய் அந்த ஆளைக் கொண்டுவர வேண்டும் என்று உத்தரவு" என்று சொல்லி விட்டுப் பேச்சியை அழைத்துக் கொண்டு அவர்கள் ரெயிலில் கிளம்பி விட்டார்கள்.

அடுத்த ஊரில் மாங்காய்த் தலை ஒரு கும்பலின் நடுவில் நின்று கொண்டிருந்தது. போலீஸ்காரர்கள் அதை நாச்சியுடன் அழைத்துக் கொண்டு மறுநாள் மாஜிஸ்டிரேட்டின் முன் ஆஜர் செய்தார்கள். அந்த ஆளைப் பார்த்த பிறகு தான் வழக்கின் விசித்திரத்தன்மை மாஜிஸ்டிரேட்டுக்கு விளங்கிற்று. சட்டப்படிக்கு உள்ள சிக்கல்களும் விளங்கின.

"ஏய், உன் பேர் என்ன?"

மாங்காய்த்தலை நின்று கொண்டிருந்தது. மாஜிஸ்டிரேட் இரண்டு மூன்று தடவை கேட்டார். பதிலைக் காணவில்லை.

"ஊமை வேஷம் போடச் சொல்லிக் கொடுத்திருக்கிறானா?"

"இல்லிங்க, அது பேசாது" என்றான் பேச்சி.

"இதை யார் வச்சுக்கிறது. கேஸ் முடியும் வரையில்?"

"எஜமான் சொல்படி"

நாச்சியிடமே மாங்காய்த் தலையை ஒப்படைத்து விட்டு ஒரு வாரம் கழித்து விசாரணையை ஒத்திப் போட்டார் மாஜிஸ்டிரேட்.

ஒரு வாரம் கழித்து நடந்த விசாரணையில் பேச்சி தரப்பில் சூரப்பன்தான் சாட்சி. எதிரி நாச்சிக்கு சாட்சியும் இல்லை; வக்கீலும் இல்லை. ஆனால் பேச்சிக்கு ஒரு

வியப்படைந்தார். சூரப்பன் சாட்சியத்தைக் கேட்ட பிறகு தான் அவருக்கு உண்மை புலப்பட்டது. கேஸ் முடிவதற்கும் அவர் தீர்ப்பு எழுதுவதற்கும் வெகு நேரம் பிடிக்கவில்லை. மாஜிஸ்டிரேட் செய்த தீர்ப்பு இது தான்.

"இது ஒரு விநோதமான வழக்கு. சாதாரணமாகச் சொத்துரிமையிலிருந்து ஸிவில் குற்றங்கள் கிளைப்பதுண்டு. அதுபோலவே கிரிமினல் குற்றங்களும் கிளைப்பதுண்டு. மனிதனுடைய அகந்தையிலிருந்தும் குற்றங்கள் பிறப்பதுண்டு. சொத்தோ அகந்தையோ இல்லாத ஒரு பிச்சைக்காரன் மற்றொரு பிச்சைக்காரன் மீது வழக்குத் தொடுத்திருப்பது வெகு தமாஷாய் இருக்கிறது. தன்னிடம் இருந்து மாங்காய்த் தலையை எப்படியோ மயக்கி நாச்சி திருடிக் கொண்டு போய்விட்டான் என்று பேச்சி குற்றம் சாட்டுகிறான்.

"மாங்காய்த்தலை, பேச்சியின் மகனோ மற்ற விதமான உறவினனோ என்று சொல்வதற்கில்லை. பேச்சியுடன் சிநேகம் கொண்ட ஓர் இரண்டுங் கெட்டானின் பிள்ளை. அந்தத் தாயே இந்த மாங்காய்த் தலையை பேச்சியிடம் விட்டுவிட்டுச் சொல்லாமல் இரவில் ஓடி விட்டாள். அதை வைத்துக் கொண்டு இவன் வயிறு வளர்த்து வருகிறான். பேச்சியைக் 'கார்டியன்' என்று சட்டப்படிச் சொல்லிவிட முடியாது.

"அது எப்படி இருந்தாலும் எதிரி மயக்கி அழைத்துக் கொண்டு போய்விட்டான் என்பதற்கு எவ்வித ருசுவும் இல்லை. இந்த வழக்கின் உண்மை, வாதி தரப்பு இரண்டாவது சாட்சியான சூரப்பனின் வாக்கு மூலத்திலிருந்து வெளிப்படுகிறது. சூரப்பன் ஒரு பிரபல கேடி. அவன் நடத்தி வரும் வெற்றிலை பாக்கு கடை ஒரு வேஷம். எந்தச் சாக்கிட்டாவது பணம் சம்பாதிக்கப் பார்ப்பது தான் அவன் தொழில். சில முதலாளிகள் வண்டிமாடு வைத்துக் கொண்டிருப்பவர்கள். சொந்தத்தில் வண்டி மாடு வைத்துக் கொள்ள முடியாத ஏழைகள் இந்த வண்டிமாட்டை வாடகைக்கு ஓட்டிச் சென்று பிழைப்பை நடத்துவதுண்டு. வண்டிக்காரன்

நாள் முழுவதும் சம்பாதிப்பதை முதலாளியிடம் கொண்டு போய்க் கொடுத்துவிட வேண்டும். முதலாளி, வண்டிக்காரனுக்கு ஒரு குறிப்பிட்ட சம்பளத்தைத் தினசரி கொடுத்து விடுவான். இந்த மாதிரி ஒப்பந்தத்தைச் சூரப்பன் பேச்சியிடம் செய்து கொண்டதன் விளைவு தான் இந்த வழக்கு. மாங்காய்த்தலை போய் விட்டால் தன் கடைக்கு வந்து கொண்டிருக்கும் பொருள்கள் வராமல் போய் விடுமே என்ற எண்ணந்தான் இந்த வழக்கு ஜோடிப்புக்குக் காரணம். எதிரியின் வாக்கு மூலத்தில் கண்டிருப்பது முழுதும் உண்மை என்று தெரிகிறது. பேச்சி மாங்காய்த் தலைக்கு இழைத்து வந்த துரோகத்தை அந்த மாங்காய்த்தலை உணர்ந்து, தானாகவே நாச்சியிடம் போய்விட்டதென்று நம்புவதற்கு தகுந்த காரணங்கள் இருக்கின்றன. மாங்காய்த்தலையைப் பேச்சி திரும்ப அழைத்துக் கொண்ட போவதில் தனக்கு ஆட்சேபம் இல்லை என்றும், குரங்கைப் பேச்சி திருப்பிக் கொடுத்து விட்டால் போதும் என்றும் வாக்குமூலத்தில் சொல்லியிருப்பது ஒன்றே இவ்வழக்கை முடிவு செய்யப் போதுமானது. வாதியின் வழக்கு ருசுவாகவில்லை. வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது."

தீர்ப்புச் சொல்லி முடிந்த பிறகு மாஜிஸ்டிரேட் நாச்சியைப் பார்த்து, "உன் ஆளை அழைத்துக் கொண்டு போகலாம். கேஸைத் தள்ளிவிட்டேன்" என்றார்.

பிச்சைக்காரர்களுக்குக் கோர்ட்டின் நடவடிக்கையைப் பற்றி என்ன தெரியும்? நாச்சியும் பேச்சியும் அப்படியே நின்று கொண்டிருந்தார்கள். கோர்ட்டுக்குச் சேவகன் மாஜிஸ்ரேட் கேஸைத் தள்ளினதைப் போல இவர்களை வெளியே தள்ளின பிறகு தான் இவர்களுக்கு விஷயம் விளங்கிற்று.

"பேச்சி, குரங்கை என் கிட்டே கொடுத்தூடு. இந்த ரோட்டோடே ஒடனே அடுத்த ஊருக்குப் போயிடறேன். ஒன் மாங்காய்த் தலையை நீயே வச்சுக்க" என்றான் நாச்சி.

சூரப்பன் இந்தப் பேச்சை ஊன்றிக் கவனித்துக் கொண்டிருந்தான். வேகமாக ஒரு கான்ஸ்டேபிள் வந்தான்.

"ஏ சூரப்பா, இந்த மாங்காய்த் தலைப் பிச்சைக்காரன் வழிக்கு இனிமேல் போனியோ அவ்வளவு தான் என்று மாஜிஸ்டிரேட் சொல்லச் சொன்னார். பாத்துக்கோ" என்றான்.

"எனக்கு அவன்கிட்டே வேலை ஏதுங்க!" என்றான் சூரப்பன்.

"அதே காபி ஓட்டல் வாசலிலே கட்டி இருக்குப்பாரு ஒன் குரங்கு. பிடிச்சுக்கிட்டுப் போ" என்று பேச்சி சொல்லவும், குரங்கைப் பிடித்துக் கொண்டு நாச்சி புறப்பட்டு விட்டான்.



2

# 5. செவ்வாழை

- அறிஞர் அண்ணா

செங்கோடன், அந்தச் செவ்வாழைக் கன்றைத் தன் செல்லப்பிள்ளை போல் வளர்த்து வந்தான் இருட்டுற நேரம் வீடு திரும்பினாலும் கூட, வயலிலே அவன் பட்ட கஷ்டத்தைக் கூடப் பொருட்படுத்தாமல், கொல்லைப் புறம் சென்று, செவ்வாழைக் கன்றைப் பார்த்துவிட்டு, தண்ணீர் போதுமானபடி பாய்ச்சப்பட்டிருக்கிறதா என்று கவனித்து விட்டுத்தான், தன் நான்கு குழந்தைகளிடமும் பேசுவான். அவ்வளவு பிரேமையுடன் அந்தச் செவ்வாழையை அவன் வளர்த்து வந்தான். கன்று வளர வளர அவன் களிப்பும் வளர்ந்தது. செவ்வாழைக்கு நீர் பாய்ச்சும் போதும், கல் மண்ணைக் கிளறிவிடும்போதும், அவன் கண்கள் பூரிப்படையும் மகிழ்ச்சியால். கரியனிடம் - அவனுடைய முதல் பையன் காட்டியதைவிட அதிகமான அன்பும், அக்கரையும் காட்டுகிறாரே என்று ஆச்சரியம், சற்றுப் பொறாமை கூட ஏற்பட்டது, குப்பிக்கு.

"குப்பி! ஏதாச்சும் மாடு கீடு வந்து வாழையை மிதிச்சிடப் போகுது. ஜாக்ரதையாக் கவனிச்சுக்கோ. அருமையான கன்று - ஆமாம், செவ்வாழைன்னா சாமான்யமில்லே. குலை, எம்மாம் பெரிசா இருக்கும் தெரியுமோ? பழம், வீச்சு வீச்சாகவும் இருக்கும், உருண்டையாகவும் இருக்கும் - ரொம்ப ருசி - பழத்தைக் கண்ணாலே பார்த்தாக்கூடப் போதும் பசியாறிப் போகும்" என்று குப்பியிடம் பெருமையாகப் பேசுவான் செங்கோடன்.

அப்பா சொல்லுவதை நாலு பிள்ளைகளும் ஆமோதிப்பார்கள் - அதுமட்டுமா - பக்கத்துக் குடிசை - எதிர்க் குடிசைகளிலே உள்ள குழந்தைகளிடமெல்லாம், இதே பெருமையைத்தான் பேசிக் கொள்வார்கள். உழவர் வீட்டுப் பிள்ளைகள், வேறே எதைப்பற்றிப் பேசிக்

கொள்ள முடியும் - அப்பா வாங்கிய புதிய மோட்டாரைப் பற்றியா, அம்மாவின் வைரத்தோடு பற்றியா, அண்ணன் வாங்கிவந்த ரேடியோவைப் பற்றியா, எதைப்பற்றிப் பேச முடியும்? செவ்வாழைக் கன்றுதான், அவர்களுக்கு, மோட்டார், ரேடியோ, வைரமாலை, சகலமும்!

மூத்த பயல் கரியன், "செவ்வாழைக் குலை தள்ளியதும், ஒரு சீப்புப் பழம் எனக்குத்தான்" என்று சொல்லுவான்.

"ஒண்ணுக்கூட எனக்குத் தரமாட்டாயாடா - நான் உனக்கு மாம்பழம் தந்திருக்கிறேன்? கவனமிருக்கட்டும் - வறுத்த வேர்க்கடலை கொடுத்திருக்கிறேன்; கவனமிருக்கட்டும்" - என்று எதிர்க்குடிசை எல்லப்பன் கூறுவான்...

கரியனின் தங்கை, காமாட்சியோ, கண்ணைச் சிமிட்டிக் கொண்டே "உனக்கு ஒரு சீப்புன்னா, எனக்கு இரண்டு தெரியுமா? அம்மாவைக் கேட்டு ஒரு சீப்பு, அப்பாவைக் கேட்டு ஒரு சீப்பு" என்று குறும்பாகப் பேசுவாள்.

மூன்றாவது பையன் முத்து, "சீப்புக் கணக்குப் போட்டுக் கிட்டு ஏமாந்து போகாதீங்க - ஆமா - பழமாவதற்குள்ளே யாரார் என்னென்ன செய்து விடுவாங்களோ, யாரு கண்டாங்க" என்று சொல்லுவான் - வெறும் வேடிக்கைக்காக அல்ல - திருடியாவது மற்றவர்களைவிட அதிகப்படியான பழங்களைத் தின்றே தீர்த்து விடுவது என்று தீர்மானித்தே விட்டான்.

செங்கோடனின் செல்லப் பிள்ளையாக வளர்ந்து வந்தது செவ்வாழை. உழைப்பு அதிகம் வயலில். பண்ணை மானேஜரின் ஆர்ப்பாட்டம் அதிகம். இவ்வளவையும் சகித்துக் கொள்வான் - செவ்வாழையைக் கண்டதும் சகலமும் மறந்துபோகும். குழந்தைகள் அழுதால், செவ்வாழையைக் காட்டித்தான் சமாதானப் படுத்துவான்! துஷ்டத்தனம் செய்கிற குழந்தையை மிரட்டவும், செவ்வாழையைத்தான் கவனப்படுத்துவான்! குழந்தைகள், பிரியமாகச் சாப்பிடுவார்கள், செவ்வாழையை என்ற எண்ணம் செங்கோடனுக்கு. பண்ணை வீட்டுப் பிள்ளைகள் ஆப்பிள், திராட்சை தின்ன முடிகிறது -

கரியனும் முத்துவும், எப்படி விலை உயர்ந்த அந்தப் பழங்களைப் பெற முடியும்? செவ்வாழையைத் தந்து தன் குழந்தைகளைக் குதூகலிக்கச் செய்ய வேண்டும் என்ற எண்ணந்தான், செங்கோடனை, அந்தச் செவ்வாழைக் கன்றைச் செல்லமாக வளர்க்கும்படிச் செய்தது. உழவன் செங்கோடனிடம், எவ்வளவு பாடுபட்டாலும், குழந்தைகளுக்குப் பழமும் பட்சணமும், வாங்கித் தரக்கூடிய 'பணம்' எப்படிச் சேர முடியும்? கூலி நெல், பாதி வயிற்றை நிரப்பவே உதவும் - குப்பியின் 'பாடு' குடும்பத்தின் பசியைப் போக்கக் கொஞ்சம் உதவும். இப்படிப் பிழைப்பு! பலனில் மிகப் பெரும் பகுதியோ, பண்ணைக்குச் சேர்ந்து விடுகிறது. இந்தச் 'செவ்வாழை' ஒன்றுதான் அவன் சொந்தமாக மொத்தமாக பலன் பெறுவதற்கு உதவக்கூடிய, உழைப்பு! இதிலே பங்கு பெற, பண்ணையார் குறுக்கிட முடியாதல்லவா? அவருக்காகப் பாடுபட்ட நேரம் போக, மிச்சமிருப்பதிலே, அலுத்துப் படுக்க வேண்டிய நேரத்திலே பாடுபட்ட? கண்ணைப் போல வளர்த்து வரும், செவ்வாழை! இதன் முழுப் பயனும் தன் குடும்பத்துக்கு! இது ஒன்றிலாவது தான் பட்ட பாட்டுக்கு உரிய பலனைத் தானே பெற முடிகிறதே என்ற சந்தோஷம் செங்கோடனுக்கு.

இவ்வளவும் அவன் மனதிலே, தெளிவாகத் தோன்றிய கருத்துக்கள் அல்ல. புகைப்படலம் போல, அந்த எண்ணம் தோன்றும், மறையும் - செவ்வாழையைப் பார்க்கும்போது பூரிப்புடன் பெருமையும் அவன் அடைந்ததற்குக் காரணம் இந்த எண்ணந்தான்.

கன்று வளர்ந்தது கள்ளங் கபடமின்றி. செங்கோடனுக்குக் களிப்பும் வளந்தது. செங்கோடனின் குழந்தைகளுக்கு இப்போது, விளையாட்டு இடமே, செவ்வாழை இருந்த இடந்தான்! மலரிடம் மங்கையருக்கும், தேனிடம் வண்டுகளுக்கும் ஏற்படும் பிரேமை போல, அந்தக் குழந்தைகளுக்குச் செவ்வாழையிடம் பாசம் ஏற்பட்டு விட்டது.

"இன்னும் ஒரு மாசத்திலே குலை தள்ளுமாப்பா?" கரியன் கேட்பான், ஆவலுடன், செங்கோடனை.

"இரண்டு மாசமாகும்டா கண்ணு" என்று செங்கோடன் பதிலளிப்பான்.

செவ்வாழை குலை தள்ளிற்று - செங்கோடனின் நடையிலேயே ஒருபுது முறுக்கு ஏற்பட்டு விட்டது. நிமிர்ந்து பார்ப்பான், குலையைப் பெருமையுடன்.

பண்ணை பரந்தாம முதலியார், தமது மருமகப் பெண் முத்து விஜயாவின் பொன்னிற மேனியை அழகுபடுத்திய வைரமாலையைக்கூட அவ்வளவு பெருமையுடன் பார்த்திருக்கமாட்டார்! செங்கோடனின் கண்களுக்கு, அந்தச் செவ்வாழைக் குலை, முத்து விஜயாவின் வைர மாலையைவிட விலை மதிப்புள்ள தாகத் தான் தோன்றிற்று. குலை முற்றமுற்ற, செங்கோடனின் குழந்தைகளின் ஆவலும், சச்சரவும், பங்குத்தகராறும், அப்பாவிடமோ அம்மாவிடமோ 'அப்பீல்' செய்வதும் ஓங்கி வளரலாயிற்று. "எப்போது பழமாகும்?" என்று கேட்பாள் பெண். 'எத்தனை நாளைக்கு மரத்திலேயே இருப்பது? என்று கேட்பான் பையன். செங்கோடன், பக்குவமறிந்து குலையை வெட்டி, பதமாகப் பழுக்க வைத்துப் பிள்ளைகளுக்குத் தர வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்தான். உழைப்பின் விளைவு! முழுப் பலனை நாம் பெறப் போகிறோம் - இடையே தரகர் இல்லை - முக்காலே மூன்று வீசம் பாகத்தைப் பறித்துக் கொள்ளும் முதலாளி இல்லை. உழைப்பு நம்முடையது என்றாலும் உடைமை பண்ணையாருடையது - அவர் எடுத்துக் கொண்டது போக மீதம்தானே தனக்கு என்று, வயலில் விளையும் செந்நெல்லைப் பற்றி எண்ண வேண்டும் - அதுதானே முறை! ஆனால் இந்தச் செவ்வாழை அப்படி அல்ல! உழைப்பும் உடைமையும் செங்கோடனுக்கே சொந்தம்.

இரண்டு நாளையில், குலையை வெட்டிவிடத் தீர்மானித்தான் - பிள்ளைகள் துள்ளின சந்தோஷத்தால், மற்ற உழவர் வீட்டுப் பிள்ளைகளிடம் 'சேதி' பறந்தது - பழம் தர வேண்டும் என்று சொல்லி, அவலோ, கடலையோ, கிழங்கோ, மாம்பிஞ்சோ, எதை எதையோ, 'அச்சாரம்' கொடுத்தனர், பல குழந்தைகள், கரியனிடம்.

பாடுபட்டோம், பலனைப் பெறப் போகிறோம், இதிலே ஏற்படுகிற மகிழ்ச்சிக்கு ஈடு எதுவும் இல்லை. இதைப் போலவே, வயிலிலும் நாம் பாடுபடுவது நமக்கு முழுப் பயன் அளிப்பதாக இருந்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும்! செவ்வாழைக்காக நாம் செலவிட்ட உழைப்பு, பண்ணையாரின் நிலத்துக்காகச் செலவிட்ட உழைப்பிலே, நூற்றுக்கு ஒரு பாகம்கூட இராது - ஆனால் உழைப்பு நம்முடையதாகவும் வயல் அவருடைய உடைமையாகவும் இருந்தால் பலனை அவர் அனுபவிக்கிறார் பெரும்பகுதி. இதோ, இந்தச் செவ்வாழை நம்ம கொல்லையிலே நாம் உழைத்து வளர்த்தது - எனவே பலன் நமக்குக் கிடைக்கிறது - இதுபோல, நாம் உழைத்துப் பிழைக்க நம்முடையது என்று ஒரு துண்டு வயல் இருந்தால், எவ்வளவு இன்பமாக இருக்கும். அப்படி ஒரு காலம் வருமா! உழைப்பவனுக்குத்தான் நிலம் சொந்தம் - பாடுபடாதவன் பண்ணையாராக இருக்கக்கூடாது என்று சொல்லும் காலம் எப்போதாவது வருமா என்றெல்லாம்கூட இலேசாகச் செங்கோடன் எண்ணத் தொடங்கினான். செவ்வாழை இதுபோன்ற சித்தாந்தங்களைக் கிளறி விட்டது அவன் மனதில். குழந்தைகளுக்கோ நாக்கிலே நீர் ஊறலாயிற்று.

செங்கோடன் செவ்வாழைக் குலையைக் கண்டு களித்திருந்த சமயம், பண்ணை பரந்தாமர், தமது மருமகப் பெண் முத்து விஜயத்தின் பிறந்தநாள் விழாவை விமரிசையாகக் கொண்டாட ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார். அம்பிகை கோயிலில் அபிஷேக ஆராதனை செய்வதற்காக 'ஐயரிடம்' சொல்லி விட்டார். கணக்குப் பிள்ளையைக் கூப்பிட்டு, பட்டி' தயாரிக்கச் சொன்னார். பல பண்டங்களைப் பற்றிக் குறிப்பு எழுதும் போது, 'பழம்' தேவை என்று தோன்றாமலிருக்குமா? 'இரண்டு சீப்பு வாழைப்பழம்' என்றார் பண்ணையார்.

"ஏனுங்க பழம் - கடையிலே நல்ல பழமே இல்லை - பச்சை நாடாத்தான் இருக்கு" என்று இழுத்தான் சுந்தரம் கணக்கப்பிள்ளை.

விடும். தவிரவும், சிறந்த [illegible] தான் ஆகட்டும்; மாணவர்கள் தாங்கள் கற்றுக் கொண்டது சரியா தப்பா என்று யோசிக்கத் துணிகிறதுண்டா என்ன?

மூன்று முட்டைகளிலிருந்து இரண்டே இரண்டு குஞ்சுகள் தாம் வெளிவந்தன. மூன்றாவது முட்டை என்ன ஆயிற்று என்று எங்களில் யாருக்கும், ராஜிக்கும் கூடத்தான், தெரியவில்லை.

"நாய் பூனை மாதிரி தன் குஞ்சுகளில் ஒன்றைச் சிட்டுக் குருவியும் தின்றிருக்கும்" என்றாள் ராஜி.

நாய் பூனை மாதிரி சிட்டுக்குருவி மாமிசபட்சிணி இல்லையே" என்று நான் ஆட்சேபித்தேன்.

"அப்படியானால் மூணாவது குஞ்சு என்ன ஆச்சு? நீங்களே சொல்லுங்களேன்" என்ற ராஜி சவால் விடுத்தாள்.

நான் மௌனம் சாதித்தேன்.

கொல்லையில் கூட்டில் குருவிக் குஞ்சுகள் பிறந்த அன்றே சரோஜா ஊருக்குப் போக நேர்ந்துவிட்டது. அவள் பாட்டி பட்டணத்திலிருந்து வந்திருந்தாள். காவேரிக் கரையில் ஒரு கிராமத்துக்குப் போக இருந்தாள். பேத்தியையும் அழைத்துக் கொண்டு போய்த் தன்னுடன் சில நாள் வைத்துக் கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டாள்.

சரோஜா முதலில் கிளம்ப மறுத்தாள். "என் சிட்டுக் குருவியை விட்டுட்டு நான் வரமாட்டேன் போ" என்றாள். "நான் வரமாட்டேன். நீ இப்பவே ஸ்டேஷனுக்குப் போய்விடு, பாட்டி" என்று பாட்டியை விரட்டினாள்.

ஆனால் பாட்டிக்குத் தெரியாதா குழந்தையின் மனம்? முறுக்குப் பண்ணித் தருகிறேன் என்றாள்; பச்சைப் பாவாடை தைத்துத் தருகிறேன் என்றாள்; கை நிறையக் காலணாக் காசு தருகிறேன் என்றாள்; காவேரியிலே ஸ்தானம் பண்ணத் தினம் அழைத்துக் கொண்டு போறேன் என்றாள். சரோஜா குதித்துக் கொண்டு பாட்டியுடன் கிளம்பத் தயாராகி விட்டாள்!

அப்படியும், அவள் குருவிக் குஞ்சை மறந்துவிட வில்லை. "ராஜி, குருவிக் குஞ்சை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கோ. நான் சீக்கிரம் வந்துடறேன்" என்றாள். "எனக்காக இரண்டு குஞ்சையும் கூண்டிலே பிடிச்சு வையுங்கோ. நான் வந்து கேட்பேன்" என்றாள் என்னிடம்.

நான், "ஆகட்டும்" என்றேன்.

மறுபடியும் ஒருதரம், ரெயிலில் ஏறி உட்கார்ந்தபின் அவள் எனக்கு அதை ஞாபகப்படுத்தினாள்.

சரோஜா ஊருக்குப் போனதும், வீடு வெறிச் சென்றிருந்தது. குருவிக் குஞ்சுகளை அடிக்கடி போய்ப் பார்த்துக் கொண்டு ராஜி ஏதோ கொஞ்சம் ஆறுதல் அடைந்து கொண்டிருந்தாள்.

குருவிக் குஞ்சுகளுக்கு மூக்கைத் தவிர வேறு ஒன்றும் சரியாக உருவடையாத பருவத்தில் ஒரு நாள், நாங்கள் இருவரும் குருவிக் கூட்டண்டை அவரைப் பந்தலின் கீழ் நின்று கொண்டிருந்தோம். முருங்கை மரக்கிளையில் உட்கார்ந்து ஒரு குருவி உரக்க, அசாதாரணமான குரலில் 'டிக் டிக்' என்று சப்தம் செய்து கொண்டிருந்தது.

ராஜி சொன்னாள்; "பார்த்தேளா அதிசயத்தை! நாம் கூட்டண்டை வறோம்னு தாய்க்குருவி, 'ஆபத்து, ஆபத்து' என்று கத்தித் தன் குஞ்சுகளை எச்சரிக்கிறது."

நான், "உம்" என்றேன்.

"நான் சொன்னா உங்களுக்கு நம்பிக்கையாக இல்லையோ? பின் ஏன் இந்தக் குருவி வழக்கம் போலக் கிறீச்சிடாமல் வேறு தினுசாகக் கிறீச்சிடுகிறதாம்?" என்றாள் ராஜி. "ஆமாம், ஆமாம்! நீ சொல்றபடிதான் இருக்க வேண்டும்" என்று சொல்லி விவாதத்திலிருந்து தப்பப் பார்த்தேன்.

"இன்னும் சந்தேகமாயிருந்தால் நான் சொல்லுகிற படி செய்து பாருங்களேன்! இரண்டு பேரும் இப்போ உள்ளே போவோம்; உடனே அந்தக் குருவி கிறீச்சிடுவதை நிறுத்தி விடுகிறதா இல்லையா பாருங்கள்!" என்றாள் ராஜி.

"மறுபடியும் திரும்பி வந்தோமானால் மறுபடியும் கிறீச்சிட ஆரம்பித்து விடும்" என்றேன்.

"வந்தேளா வழிக்கு?"

"வழிக்க வராமல் எங்கே போவதாம்?" என்று பதிலளித்தேன் நான். "சரி, சாப்பிடலாமே! நாழியா கல்லையா?"

ராஜிக்கு அப்போது தான் ஞாபகம் வந்தது; "ஐயையோ! அடுப்பிலே ஈயச் சொம்பைப் போட்டுட்டு வந்துட்டேனே! என்ன ஆச்சோ!" என்று சொல்லிக் கொண்டே ராஜி இரண்டெட்டில் என்னைத் தாண்டிக் கொண்டு சமையலறைக்குள் ஓடினாள்.

"போயிடுத்தா ஈயச்சொம்பு! என்ன அஜாக்கிரதை?" என்று எக்களிப்புடன் கூறிக் கொண்டே நானும் அவளைப் பின் தொடர்ந்தேன். "இந்தக் காலத்திலே ஈயம் சேர் என்ன விலை விற்கிறது! இவ்வளவு அஜாக்கிரதையாக, அழகாகக் குடித்தனம் நடத்தினால்...."

நான் என்னுடைய வாக்கியத்தை முடிக்கவில்லை. கையில் உருகாத ஈயச் செம்புடன் ராஜி நின்று கொண்டிருந்தாள். எரிந்து கொண்டிருந்த அடுப்பின் மேல் வைக்காமல் அவள் சிட்டுக்குருவி பார்க்கப் போன அவசரத்தில் கீழேயே வைத்து விட்டுப் போய் விட்டாள். ஈயச் செம்பு தப்பிற்று. எனக்கு வத்தத்ததான். அவசரப்பட்டுச் சொன்ன சொற்களை வாபஸ் வாங்கிக் கொண்டு தான் ஆக வேண்டும்!

"நான் குடித்தனம் பண்ற அழகுக்கு என்ன வந்தது இப்போ! அப்படிச் சொம்பு போனாத்தான் என்ன? எங்கம்மா வாங்கிக் கொடுத்தது தானே! நீங்க சம்பாதிச்சு வாங்கிக் கொடுத்தது என்ன கெட்டுப்போச்சு?" என்றாள். இது பாய்ச்சலில் முன் பதுங்கல்.

"வாசல்லே யாரோ கூப்பிடறாப்போல இருக்கே" என்று நான் அங்கிருந்து தப்பித்துக் கொள்ள முயன்றேன்.

"நீங்க சம்பாதிச்சுப் போடற அழகுக்கு நான் குடித்தனம் பண்ற அழகு ஒண்ணும் கெட்டுப்

போயிடவில்லை. ஆறு மாசத்துக்கொரு தரம் ஏதாவதொரு பத்திரிகையிலே ஒரு கதையை எழுதிவிட்டு, வருஷத்தில் மற்ற ஆறு மாசமும் அதைப் பற்றிப் பெருமை அடிச்சுக் கொண்டிருந்தால் சரியாப் போச்சா! கதைக்கு வள்ளிசா ஒன்பதே முக்காலே அரைக்கால் ரூபா வந்துவிடும். அதை வச்சிண்டு ஜோரா ஒரு வருஷம் குடித்தனம் பண்ண வேண்டியது தான், குடித்தனம்! என் குடித்தனம் கெட்டுப் போச்சாமே!.....ம்..."

நான் பேச்சை ஹாஸ்ய பாவத்துக்குத் திருப்பப் பார்த்தேன்; "கதைக்குச் சம்மானம் மணியார்டராக அனுப்பினால் தான் ஒன்பதே முக்காலே அரைக்கால் வரும். இப்போ செக்கான்னு எல்லாரும் அனுப்பிச்சு விடறான்; கால் ரூபாய் கமிஷன் போயிடறது" என்று சொல்லிச் சிரித்தேன்.

"சிரிப்பு வேறு வேண்டிக் கிடக்கில்லையா?" என்று ராஜி சினந்து கொண்டால், "அதுக்குள்ளேயே இவையை எடுத்துப் போட்டுண்டு என் பிராணனை வாங்காதேங்கோ. ஒரு மணி நேரம் கழித்து வாங்கோ. ரசம் இனிமேல் தான் ஆகணும்.... நான் குடித்தனம் பண்ற அழகு பிடிக்கலையாமே!"

"ரசம் வைக்க ஒரு மணி நேரமா ஆகும்?" என்று அசட்டுத் தனமாக, என்ன கேட்கிறோம் என்று பசிவேகத்தில் அறியாமல் கேட்டு விட்டேன்.

அவ்வளவு தான். என் குற்றங்குறைகள் எல்லாம், சரமாரியாக என் மேல் விசிறப்பட்டன. நல்ல வேளையாக அந்தச் சமயம் வெளிக்கதவை யாரோ உண்மையிலேயே தட்டவே நான் ஒருவழியாக, செந்தேன் பிழைத்தேன் என்று ஓடிவிட்டேன்.

வந்தவருடன் பேசி, அவரை அனுப்பி விட்டு நான் அரைமணி நேரங்கழித்துத் தான் வீட்டுக்குள் போனேன். சமையலறையில் இலை போட்டிருந்தது. வழக்கத்துக்கு விரோதமாக ராஜி கோபத்திலும் மௌனமாகவே இருந்தாள். ஆனால், இந்தக் கோபமும் மௌனமும் அன்று அதிக நேரம் நீடிக்கவில்லை. சிட்டுக் குருவியைப்

பற்றிய ஏதோ ஒரு உற்சாகமான வார்த்தையில் கரைந்து போய்விட்டது.

நாளடைவில் கூட்டிலிருந்த குருவிக் குஞ்சுகள் வளர்ந்து பெரியவையாயின. நாங்கள் கூட்டண்டை போனால் அவை முதலில் வாயைப் பிளக்கும், தாய்க் குருவி தான் உணவு கெண்டு வந்திருக்கிறது என்ற எண்ணத்தினால், அவற்றின் வாயுந்தான் எவ்வளவு அழகாயிருந்தது! பிறகு கடுகு போன்ற சிறு கண்களை மிரள மிரள விழித்துப் பார்த்து விட்டு மெல்லிய குரலில் பயத்துடன் கிறீச்சிடும். அந்தக் குரலில் தான் என்ன பயம் தொனித்தது!

"ஐயையோ! தாய்க் குருவி இரை கொண்டு வந்திருக்கு; உள்ளே வந்துடுங்கோ. அது இரை கொடுத்துட்டுப் போயிடட்டும். இல்லா விட்டால், இரையில்லாமல் குருவிக் குஞ்சு செத்துப் போய்விடும். பாவம் நமக்குத்தான்" என்று ராஜி என்னை அவசரப்படுத்துவாள். ஆனால் நான் உள்ளே போய்ப் பத்து நிமிஷமான பிறகு தான் அவள் வருவாள்.

தன் குஞ்சுகளுக்கு உணவு கொண்டு வந்து தருவது தாய்க்குருவியா, தகப்பன் குருவியா என்று எங்களுக்குள் ஒரு நாள் விவாதம் மூண்டது; இன்னமும் அது முடியவில்லை. சிட்டுக்குருவிக் குஞ்சுகள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து பெரியவையாகிக் கொண்டிருந்தன.

(நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக என்கிற தொடர், பழங்கதையின் எந்தக் கதாநாயக நாயகியையும் விட, என் கதாநாயகர்களுக்கு ரொம்பவும் பொருந்தும் என்று நான் எண்ணுகிறேன்). சிறகுகள் வளர்ந்து பறக்கத் துடித்துக் கொண்டிருந்தன.

அச்சமயம் ஒருநாள் இரவு காற்றும் மழையும் பலமாக அடித்தது. இரவு மூன்று மணி இருக்கும். ஒரு பலத்த இடிச் சத்தத்தைக் கேட்டு விழித்துக் கொண்ட ராஜி, விலகியிருந்த போர்வையை இழுத்து மூடிய படியே சொன்னாள்; "பாவம்! கொல்லையிலே கூட்டில் குருவிக்

குஞ்சுகள் இந்தக் காத்திலும் மழையிலும் குளிரிலும் என்ன பாடு படுகின்றனவோ?"

"நான் போய்ப் பார்த்துவிட்டு வரட்டுமா?" என்றேன் நான், என் போர்வைக்குள்ளிருந்து,

ராஜிக்குத் தூக்கக் கலக்கம், பதில் சொல்லவில்லை.

மறுநாள் காலையில் எழுந்து கொல்லைப் பக்கம் போய்ப் பார்த்த போது, குருவியின் கூடு மழையில் நைந்து அறுந்து கீழே கிடந்தது. திட்டுத் திட்டாகத் தேங்கியிருந்த ஜலத்தில், மூச்சுக் காட்டாமல் கூட்டில் குஞ்சுகள் ஒண்டிக் கொண்டிருந்தன.

கூட்டோடு அவற்றைத் தூக்கிக் கொண்டு வந்து கொல்லைத் தாழ்வாரத்தில் உலர்ந்திருந்த இடத்தில் போட்டேன்.

"ஐயோ பாவமே!" என்று அளவு கடந்த அநுதாபத்துடன் சொல்லிக் கொண்டு வந்த ராஜி தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டாள். அவளால் அந்தக் குஞ்சுகளை விட்டுக் கண்ணை எடுக்கவே முடியவில்லை.

வெயில் காய ஆரம்பித்ததும் வழக்கம் போலத் தாய்க்குருவி தன் குஞ்சுகளைத் தேடிக் கொண்டு வந்தது போலும். வழக்கமான இடத்தில் கூட்டையோ குஞ்சுகளையோ காணாமல், அது உடனே கூச்சலிட ஆரம்பித்து விட்டது. அந்தச் சிறு குருவியின் குரல் தெருவை நிரப்பி அதற்கப்பாலும் பரவி நின்றது. ஊர் முழுவதுமே, ஏன் உலகம் முழுவதுமே, அதற்கப்பாலுமே, அந்தத் தாயின் சோகக் குரல் எட்டும் என்று எனக்குத் தோன்றிற்று.

"பாவம்! குருவி வந்து தன் குஞ்சுகளைக் காணோமே என்று தவிக்கிறது!" என்றாள் ராஜி. அவள் குரலிலும் அளவுகடந்த பரிதாபம் தொனித்தது.

சிறிது நேரத்தில் அந்தக் குருவியின் கூக்குரலை அவளால் சகிக்க முடியாமல் போய்விட்டது. 'அது நம்மை வாயாரச் சபிக்கிறது. பாருங்களேன். பேசாமல்

அந்தக் குஞ்சுகளைக் கொல்லையிலேயே கொண்டு போய் விட்டுவிட்டு வந்துவிடுங்கள். குருவியின் பாடு; குஞ்சுகளின் பாடு, கொண்டு போய் விட்டு விடுங்கள்" என்றாள் ராஜி.

குருவிக் குஞ்சுகளைத் தான் எடுத்து வளர்க்க வேண்டுமென்ற ஆசை, குருவியின் சோகக் குரலைக் கேட்டபின் ராஜிக்கு அற்றுப் போய்விட்டது. எனக்கு அப்படியில்லை. சரோஜாவுக்காக அவற்றை வளர்க்கலாமே என்று தோன்றிற்று.

குருவிக் குஞ்சுகளின் மேல் ஒரு கூடையைக் கவிழ்த்து மூடி வைத்தேன்.

ராஜி இன்னமும் லேசாக ஆட்சேபங்கள் சொல்லிக் கொண்டேயிருந்தாள்.

"சிட்டுக் குருவி வளர்ப்பது ரொம்பவும் சிரமம் என்று அடுத்தாத்துப் பாட்டி சொல்லுகிறாள்" என்றாள் ஒருதரம்; "பூனை எல்லாக் குருவிகளையும் தின்று விடுமாமே!" என்றாள். "குருவியைப் பிடித்துக் கூட்டில் அடைத்து வைத்தால் அடுத்த ஜன்மத்தில் சிறைவாசம் செய்ய நேருமாம்" என்றாள் ஒருதரம்.

ஆனால் நான் அதையெல்லாம் காதில் வாங்காமல் சிட்டுக் குருவிகளை அன்று முழுவதும் சிறைப்படுத்தியே வைத்திருந்தேன். பெரிய குருவி அன்று பகல் பூராவும், விட்டுவிட்டு, தன் அபயக் குரலை எழுப்பிக் கொண்டேயிருந்தது. முன்னே எங்கள் தோட்டத்தில் பார்த்தேயிராத பல ஜாதிக் குருவிகள் அதற்கு ஒத்துப் பாட வந்து சேர்த்துக்கொண்டன. கொல்லைப் பக்கம் போனால் 'கசமுச' வென்று பல பறவைகளின் குரல்கள் ஒலித்தன.

"அவையெல்லாமாகச் சேர்ந்து கொண்டு நம்மைச் சபிக்கின்றன" என்றாள் ராஜி.

இரவு குருவிக் குஞ்சுகள் பூனை கையில் அகப்படாமல் இருக்க வேண்டுமே, என்று என் படுக்கைக்கருகில் தலைமாட்டிலேயே வைத்துக் கொண்டு படுத்திருந்தேன். ராஜிக்கோ எனக்கோ சரியான

தூக்கமில்லை. அவள் ஏதோ சொப்பனங் கண்டு பிதற்றிக் கொண்டிருந்தாள். கண்ணை மூடினால் போதும்; காதிலே லட்சக் கணக்கான பறவைகளின் குரல் ஒலிக்கத் தொடங்கிற்று.

விடியற் காலையிலேயே எழுந்து குருவிக் குஞ்சுகளை அவரைப் பந்தலின் கீழே கொண்டு போய் விட்டுவிட்டேன். அவை சோர்ந்து போனவை போல் ஒன்றோடொன்று ஒண்டிக் கொண்டு கிடந்தன. நான் அவற்றைவிட்டு நகர்ந்தவுடன் முருங்கை மரக் கிளையிலிருந்து தாய்க் குருவி பறந்து வந்து அவற்றண்டை உட்கார்ந்து கொண்டது. குஞ்சுகளும் சோர்வு நீங்கி மெல்லிய குரலில் கிறீச்சிடலாயின.

தூங்கி எழுந்து வந்த ராஜியிடம் நான் குருவிகளை விட்டு விட்ட விஷயத்தைச் சொன்னேன்.

"விட்டுவிட்டேளா?" என்று சற்று வருத்தத்துடனேயே அவள் கேட்டாள்.

அரை மணிநேரம் கழித்துக் கொல்லைப் பக்கம் போய்ப் பார்த்தபோது, குருவியையோ குருவி குஞ்சுகளையோ அங்கே காணவில்லை.

"அதோ அடுத்தாத்துப் பக்கம் பந்தலிலே இருக்கு. நம்மாத்துக் குருவி" என்று ராஜி காட்டினாள்.

"நம்மாத்துக் குருவியா?" என்ற சொல்லிச் சிரித்தேன் நான்.

என் மனத்திலிருந்து ஒரு பெரிய பாரம் நீங்கியது போல் இருந்தது. ஆனால் ராஜிக்கு மட்டும் வருத்தந்தான்.



# 8. குருபீடம்

**- ஜெயகாந்தன்**

அவன் தெருவில் நடந்தபோது வீதியே நாற்றமடித்தது. அவன் பிச்சைக்காகவோ அல்லது வேடிக்கை பார்ப்பதற்காகவோ சந்தைத்திடலில் திரிந்து கொண்டிருந்தபோது அவனைப் பார்த்த மாத்திரத்தில் எல்லோருமே அருவருத்து விரட்டினார்கள். அவனை விரட்டுவதற்காகவே சிலபேர் ஏதோ பாவ காரியத்தைச் செய்கிற மாதிரி அவனுக்குப் பிச்சையிட்டார்கள்.

அவன் ஜெயிலிலிருந்து வந்திருப்பதாகச் சில பேர் பேசிக்கொண்டார்கள். அவன் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேற்றப்பட்டவனென்றும் சிலர் சொன்னார்கள்.

ஆனால், இப்போது அவன் நோயாளியோ பைத்தியக்காரனோ அல்ல என்று அவனைப் பார்த்த எல்லாரும் புரிந்து கொண்டார்கள். உண்மையும் அதுதான். சோம்பலும், சுயமரியாதை இல்லாமையும், இந்தக் கோலம் அசிங்கமென்று உணர முடியாத அளவுக்கு அவனிடம் ஊறி உறைந்துபோன தாமசத்தின் மதமதப்பினாலும் அவன் இவ்வாறு திரிகிறான். பசிக்கிறதோ இல்லையோ தன் கையில் கிடைத்ததையும் பிறர் கையில் இருப்பதையும் தின்ன வேண்டுமென்ற வேட்கை அவன் கண்ணில் அலைந்தது. ஒரு குழந்தை சாப்பிடுவதைக்கூட ஒரு நாய் மாதிரி அவன் நின்று பார்த்தான். அவர்களும் அவனை நாயை விரட்டுவது மாதிரி விரட்டினார்கள். அவ்விதம் அவர்கள் விரட்டி அவன் விலகிவரும்போது அவன் தனது பார்வையால் பிறர் சாப்பிடும் பொருளை எச்சில் படுத்திவிட்டு வந்தான். அவன் எப்போதும் எதையாவது தின்றுகொண்டே இருந்தான். அவன் கடைவாயிலும் பல்லிலும் அவன் தின்றவை சிக்கிக் காய்ந்திருந்தது. யாராவது பீடியோ சுருட்டோ புகைத்துக்

கொண்டிருந்தால் அதற்கும் அவன் கையேந்தினான். அவர்கள் புகைத்து எறிகிற வரைக்கும் காத்திருந்து, அதன் பிறகு அவற்றைப் பொறுக்கி அவர்களை அவமரியாதை செய்கிற மாதிரியான சந்தோஷத்துடன் அவன் புகைத்தான்.

சந்தைக்கு வந்திருக்கிற நாட்டுப்புறப் பெண்கள் குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும்போதும், குனிந்து நிமிர்கையில் ஆடை விலகும்போது, இவன் காமாதூரம் கொண்டு வெட்கமில்லாமல் அவர்களை வெறித்துப் பார்த்து ரசித்தான்.

அவனுக்கு உடம்பில் நல்ல வலுவும் ஆரோக்கியமும் இருந்தது. எனினும் எப்போதும் ஒரு நோயாளியைப்போல் பாசாங்கு செய்வது அவனுக்குப் பழக்கமாகிப் போய்விட்டது. அவனுக்கு வயது நாற்பதுக்குள்தான் இருக்கும். கடுமையாக உழைக்காததாலும், கவலைகள் ஏதும் இல்லாததாலும் அவன் உடம்புவாகே ஒரு பொலிகாளை மாதிரி இருந்தது. இளமையும் உடல் வலுவும் ஆரோக்கியமும் இயற்கையால் அவனுக்கு அனுக்கிரகிக்கப்பட்டிருந்தும் அவன் தன்னைத்தானே சபித்துக் கொண்டது மாதிரி சேற்றில் மேய்கிற பன்றியாய்த் திரிந்தான்.

சந்தைத் திடலுக்கும் ரயிலடிக்கும் நடுவேயுள்ள குளக்கரையை அடுத்த சத்திரத்தில் உட்கார்ந்து கொண்டு அங்கே குளிக்கிற பெண்களை வேடிக்கை பார்ப்பது அவனுக்கு ஒரு பொழுதுபோக்கு. ஆனால், ஒரு நாளாவது தானும் குளிக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியதே இல்லை. மற்ற நேரங்களில் அவன் அந்தத் திண்ணையில் அசிங்கமாகப் படுத்து உறங்கிக் கொண்டிருப்பான். சில சமயங்களில் பகல் நேரத்தில் கூட உறங்குவது மாதிரி பாவனையில் வேண்டுமென்றே ஆடைகளை விலக்கிப் போட்டுக்கொண்டு தெருவில் போவோர் வருவோரை அதிர்ச்சிக்கு உள்ளாக்கி ரகசியமாக மனத்திற்குள் மகிழ்ச்சி அடைவான்.

இரண்டு தினங்களுக்கு முன்பு லேசாக மழை பெய்து கொண்டிருந்த இரவில் ஒரு பிச்சைக்காரி இந்தச்

சத்திரத்துத் திண்ணையில் வந்து படுக்க, அவளுக்கு ஏதேதோ ஆசை காட்டிக் கடைசியில் அவளை வலியச்சென்று சல்லாபித்தான். அதன் பிறகு இவனை பழிவாங்கிவிட்ட மகிழ்ச்சியில் தனது குறைபட்டுப்போன விரல்களைக் காட்டித் தான் ஒரு நோயாளி என்று அவள் சிரித்தாள். அதற்காக அருவருப்புக் கொள்கிற உணர்ச்சி கூட இல்லாமல் அவன் மழுங்கிப் போயிருந்தான். எனவே, இவள் இவனுக்குப் பயந்துகொண்டு இரண்டு நாட்களாக இந்தப் பக்கமே திரும்பவில்லை. இவன் அவளைத் தேடிக்கொண்டு நேற்று இரவெல்லாம் சினிமாக் கொட்டகை அருகேயும், சந்தைப் பேட்டையிலும், ஊரின் தெருக்களிலும் கார்த்திகை மாதத்து நாய் மாதிரி அலைந்தான்.

மனித உருக்கொண்டு அவனிடம் உறைந்துபோன தாமசத் தன்மையினால், சோம்பலைச் சுகமென்று சுமந்து கொள்கிற புத்தியின் மந்தத்தினால் அருவருக்கத்தக்க ஒரு புலை நாய் மாதிரி அவன் அங்கு அலைந்து கொண்டிருந்தான். வயிற்றுப்பசி, உடற்பசி என்கிற விகாரங்களிலும் உபாதைகளிலும் சிக்குண்டு அலைகின்ற நேரம் தவிர, பிற பொழுதுகளில் அந்தச் சத்திரத்துத் திண்ணையில் அவன் தூங்கிக் கொண்டே இருப்பான்.

காலை நேரம்; விடியற்காலை நேரம் அல்ல. சந்தைக்குப் போகிற ஜனங்களும், ரயிலேறிப் பக்கத்து ஊரில் படிப்பதற்காகப் போகும் பள்ளிக்கூடச் சிறுவர்களும் நிறைந்து அந்தத் தெருவே சுறுசுறுப்பாக இயங்குகின்ற - சுரீர் என்று வெயில் அடிக்கிற நேரத்தில், அழுக்கும் கந்தலுமான இடுப்பு வேட்டியை அவிழ்த்துத் தலையில் இருந்து கால்வரை போர்த்திக் கொண்டு, அந்தப் போர்வைக்குள் கருப்பிண்டம் மாதிரி முழங்கால்களை மடக்கிக் கொண்டு, கைகளிரண்டையும் காலிடையே இடுக்கியவாறு வாயிலிருந்து எச்சில் ஒழுக, ஈ மொய்ப்பது கூடத் தெரியாமல் அவன் தூங்கிக் கொண்டிருந்தான். தெருவிலே ஏற்படுகிற சந்தடியும் இரைச்சலும் ஏதோ ஒரு சமயத்தில் அவன் தூக்கத்தைக் கலைத்தது எனினும் அவன் விழித்துக் கொள்ள விரும்பாததனால் தூங்கிக் கொண்டிருந்தான்.

இதுதான் சோம்பல், உறக்கம் உடலுக்குத் தேவை. ஆனால், இந்தத் தேவையற்ற நிர்ப்பந்தத் தூக்கம்தான் சோம்பலாகும். இந்த மதமதப்பைச் சுகமென்று சகிக்கிற அறிவுதான் தாமசமாகும்.

விரைவாக ஏறி வந்த வெயில் அவன்மீது மெதுவாக ஊர்ந்தது. அவன் தெருவுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு சுவர் ஓரமாகப் படுத்திருந்தான். சத்திரத்துச் சுவரின் நிழல் கொஞ்சங் கொஞ்சமாகச் சுருங்க ஆரம்பித்தது. முதலில் வெயிலின் விளிம்பு அவனது விலாவுக்கும் தரைக்கும் இடையே மெள்ள மெள்ளப் புகுவதை அவனது மதர்த்த தேகம் ரொம்பத் தாமதமாக உணர்ந்தது. வெயிலின் உறைப்பை உணரக்கூடிய உணர்ச்சிக் குறுகுறுப்பு மழுங்கிப் போனதால் ஒரு மலைப்பாம்பு மாதிரி அவன் அசிங்கமாக நெளிந்தான். அந்த வெப்பத்திலிருந்து - அந்த வெயிலின் விளிம்பிலிருந்து ஒரு நூல் இழை விலகுவதற்கு எவ்வளவு குறைவான, மெதுவான முயற்சி எடுத்துக் கொள்ளலாமோ, அவ்வளவே அவன் நகர்ந்து படுத்தான். சற்று நேரத்தில் மறுபடியும் வெயில் அவனைக் கடித்தது. அவனது அசமந்தம் எரிச்சலாகி அவன் தூக்கம் கலைந்தான். ஆனாலும் அவன் எழுந்திருக்கவில்லை. இன்னும் கொஞ்சம் நகர்ந்து சுவரோடு ஒட்டிக் கொண்டான்.

எதிரே இருந்த டீக்கடையிலிருந்து டீ அடிக்கிற சத்தம் கேட்டது. அந்தச் சத்தத்தில் அவன் டீ குடிப்பது மாதிரி கற்பனை செய்து கொண்டான்.

மறுபடியும் வெயில் அவனை விடாமல் போய்க் கடித்தது. அதற்குமேல் நகர முடியாமல் சுவர் தடுத்தது. ஒரு பக்கம் சுவரும் ஒரு பக்கம் வெயிலும் நெருக்க அவன் எரிச்சலோடு எழுந்து உட்கார்ந்தான். அவனுக்குக் கண்கள் கூசின ஒரு கண்ணைத் திறக்கவே முடியவில்லை. பீளை காய்ந்து இமைகள் ஒட்டிக் கொண்டிருந்தன.

அவன் ஒரு கையால் கண்ணைக் கசக்கிக் கொண்டே இன்னொரு கையால், தலைமாட்டில் சேகரித்த வைத்திருந்த துண்டு பீடிகளில் ஒன்றை

எடுத்தான். பீடியைப் பற்ற வைத்து அவன் புகையை ஊதிய போது அவனது அரைக் கண் பார்வையில் மிக அருகாமையில் யாரோ நின்றிருக்கிற மாதிரி முகம் மட்டும் தெரிந்தது. புகையை விலக்கிக் கண்களைத் திறந்து பார்த்தான்.

எதிரே ஒருவன் கைகளை கூப்பி, உடல் முழுவதும் குறுகி, இவனை வணங்கி வழிபடுகிற மாதிரி நின்றிருந்தான். இவனுக்குச் சந்தேகமாகித் தனக்குப் பின்னால் ஏதேனும் சாமி சிலையோ, சித்திரமோ இந்தச் சுவரில் இருக்கிறதா என்று திரும்பிப் பார்த்து நகர்ந்து உட்கார்ந்தான். இவனது இந்தச் செய்கையில் ஏதோ ஒரு அரிய பொருளைச் சங்கேதமாகப் புரிந்துகொண்டு வந்தவன் மெய்சிலிர்த்து நெக்குருகி நின்றான்.

"இவன் எதற்குத் தன்னை வந்து கும்பிட்டுக் கொண்டு நிற்கிறான் - பைத்தியமோ?" என்று நினைத்து உள்சிரிப்புடன்

"என்னாய்யா இங்கே வந்து கும்பிடறே? இது கோயிலு இல்லை - சத்திரம் என்னைச் சாமியார் கீமியார்னு நெனச்சுக்கிட்டியா? நான் பிச்சைக்காரன்....." என்றான் திண்ணையிலிருந்தவன்.

"ஓ!.... கோயிலென்று எதுவுமே இல்லை.... எல்லாம் சத்திரங்களே! சாமியார்கள் என்று யாருமில்லை. எல்லாரும் பிச்சைக்காரர்களே!" என்று அவன் சொன்னதை உபதேச மொழிகள் மாதிரி இலக்கண அலங்காரத்தோடு திரும்பத் திரும்பச் சொல்லிப் புதிய புதிய அர்த்தங்கள் கண்டான் தெருவில் நின்றவன்.

"சரி சரி! இவன் சரியான பைத்தியம்தான்" என்று நினைத்துக் கொண்டான் திண்ணையிலிருந்தவன்.

தெருவில் நின்றவன் இவனிடம் விண்ணப்பித்துக் கொள்கிற பவ்யத்துடன் "சுவாமி" என்றழைத்தான்.

இவனுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. வந்த சிரிப்புகள் பெரும் பகுதியை அடக்கிக் கொண்டு புன்முறுவல் காட்டினான்.

என்னைத் தங்களுடைய சிஷ்யனாக ஏற்றுக் கொள்ள வேண்டும். தங்களுக்குப் பணிவிடை புரியவும், தாங்கள் அழைத்த குரலுக்கு ஓடி வரவும் எனக்கு அனுக்கிரகிக்க வேண்டும்."

திண்ணையிலிருந்தவனுக்கு ஒன்றும் புரியவில்லை. "சரி, இப்போ எனக்கு ஒரு டீ வாங்கியாந்து குடு" என்றான்.

அந்தக் கட்டளையில் அவன் தன்னைச் சீடனாக ஏற்றுக் கொண்டுவிட்டான் என்று புரிந்துகொண்ட மகிழ்ச்சியுடன் இடுப்புத் துண்டிலிருந்த சில்லரையை அவிழ்த்துக் கொண்டு ஓடினான் வந்தவன். அவன் கையிலிருந்த காசைப் பார்வையால் அளந்த 'குரு' ஓடுகின்ற அவனைக் கைதட்டிக் கூப்பிட்டு "அப்படியே பீடியும் வாங்கியா" என்று குரல் கொடுத்தான்.

அவன் டீக்கடைக்குச் சென்று பார்வைக்கு மறைந்ததும் இவன் வந்து சீடனாக வாய்த்த அதிர்ஷ்டத்தை எண்ணிப் பெருங்குரலில் சிரித்தான் குரு "சரியான பயல் கிடைத்திருக்கிறான். இவன் மயக்கம் தெளியாதபடி பார்த்துக்கணும். திண்ணெயெ விட்டு எறங்காமல் சொகமா இங்கேயே இருக்கலாம். பிச்சைக்கு இனிமே நாம்ப அலைய வேணாம். அதான் சிஷ்யன் இருக்கானே....கொண்டான்னா கொண்டுவரான். முடிஞ்சா சம்பாரிச்சுக் குடுப்பான்... இல்லாட்டி பிச்சை எடுத்துக்கினு வரான்... என்னா அதிர்ஷ்டம் வந்து நமக்கு அடிச்சிருக்கு......." என்று மகிழ்ந்திருந்தான் குரு.

சற்று நேரத்தில் சீடன் டீயும் பீடியும் வாங்கி வந்து நிவேதனம் மாதிரி இரண்டு கைகளிலும் ஏந்திக் கொண்டு குருவின் எதிரே நின்றான்.

குரு அவனைப் பார்த்து பொய்யாகச் சிரித்தான். அவன் கையிலிருந்த டீயையும் பீடியையும் தனக்குச் சொந்தமான ஒன்று - இதனை யாசிக்கத் தேவையில்லை - என்ற உரிமை உணர்ச்சியோடு முதன் முறையாய்ப் பார்த்தான். அதனை வாங்கிக் கொள்வதில் அவன் அவசரம் காட்டாமல் இருந்தான். தான் சீடனை

நடந்து கொள்வதற்காக அவன் பீடிகையாகச் சொன்னான்.

"என்னை நீ கண்டுபிடிச்சுட்டே. நீ உண்மையான சிஷ்யன்தான். என்னை நீ இன்னிக்குத்தான் கண்டுபிடிச்சே. ஆனால், நான் உன்னை ரொம்ப நாளாப் பார்த்துக்கினே இருக்கேன். நான் உன்னைக் கொஞ்சம் கேள்விங்கள்ளாம் கேப்பேன். அதுக்கெல்லாம் நீ பதில் சொல்லணும். அதுக்கோசரம் எனக்கு ஒண்ணும் தெரியாதுன்னு நினைச்சுக்காதே. எனக்கு எல்லாம் தெரியும்! தெரிஞ்சாலும் சிலதெல்லாம் கேட்டுத்தான் தெரிஞ்சுக்கணும்."

இந்த வார்த்தைகளைக் கேட்டு இரண்டு கையிலும் டீயையும் பீடியையும் ஏந்தி இருந்த சீடன் அவனைக் கரங்கூப்பி வணங்க முடியாமல் பார்வையாலும் முகபாவத்தாலும் தன் பணிவைக் காட்டினான்.

"நீ யாரு? எந்த ஊரு? பேரு என்ன? நீ எங்கே வந்தே? நான்தான் குருன்னு உனக்கு எப்படி தெரிஞ்சது?....... டீ ஆறிப் போச்சில்லே? குடு" என்று டீயை வாங்கிக் குடித்துக்கொண்டே சீடன் சொல்கிற பதிலை மெத்தனமாகத் தலையை ஆட்டியவாறே கேட்டான்.

"குருவே.....நான் ஒரு அனாதை. அதோ இருக்கிறதே முருகன் கோயில், அங்கே ஒரு மடப்பள்ளி இருக்குது. அங்கே தண்ணி எறைச்சுக் கொண்டு வர்ற வேலை. மடப்பள்ளியிலே இருக்கிற ஐயிரு மூணு வேளையும் சாப்பாடு போட்டுச் செலவுக்கு நாலணா தினம் குடுக்கிறாரு. எனக்கு வாழ்க்கை வெறுத்துப் போச்சு. இந்த வாழ்க்கைக்கு அர்த்தமில்லேன்னு தெரிஞ்சும் உடம்பைச் சுமந்துகிட்டுத் திரியற சுமையைத் தாங்க முடியலே.... துன்பத்துக்கெல்லாம் பற்று தான் காரணம்னு எல்லாரும் சொல்றாங்க. எனக்கு ஒரு விதப் பற்றும் இல்லே..... ஆனாலும் நான் துன்பப்படறேன்... என்ன வழியிலே மீட்சின்னு எனக்குத் தெரியலே...... நேத்து என் கனவிலே நீங்க பிரசன்னமாகி, "இந்தச் சந்திரந்தான் குருபீடம், அங்கே வா' ன்னு எனக்குக் கட்டளை இட்டீங்க குருவே!

நீங்க இதெல்லாம் கேட்கிறதனாலே சொல்றேன். தாங்கள் அறியாததா? விடியற்காலையிலேருந்து சந்நிதானத்திலே காத்துக்கிட்டிருந்தேன். என் பாக்கியம் தங்கள் கடாட்சம் கிட்டியது...."

"ம்.......ம்......." என்று மீசையை நெருடிக்கொண்டே அவன் கூறுவதைக் கேட்ட குரு, காலியான தம்ளரை அவனிடம் நீட்டினான்.

சீடன் டீக்கடையில் காலித் தம்ளரைக் கொடுக்கப் போனான். கடவுள் இந்தப் பயலை நன்றாகச் சோதிக்கிறார் என்று நினைத்து அவனுக்காக அனுதாபப்பட்டுச் சிரித்தான் குரு. "ம்... அதனால் நமக்கென்ன? நமக்கு ஒரு சிஷ்யன் கிடைத்திருக்கிறான்" என்று திருப்திப்பட்டுக் கொண்டான்.

சீடன் வந்தபிறகு அவன் பெயரைக் கேட்டான் குரு. அவன் பதில் சொல்வதற்குள் தனக்குத் தெரிந்த பல பெயர்களைக் கற்பனை செய்த குரு திடீரெனச் சிரித்தான். இவன் கூறுமுன் இவனது பெயரைத்தான் சொல்ல முடிந்தால் இந்த நாடகத்தில் அது எவ்வளவு அற்புதமான லீலையாக அமையும் என்று நினைத்தே அவன் சிரித்தான். அந்தச் சிரிப்பினால் சீடன் பதில் சொல்லச் சற்றுத் தயங்கி நின்றான்.

அப்போது குரு சொன்னான். "பேரு என்னான்னு ஒரு கேள்வி கேட்டா - ஒவ்வொருத்தனும் ஒவ்வொரு பதில் சொல்றான் பாத்தியா? ஒரு கேள்விக்கு எம்மாம் பதில்!" என்று ஏதோ தத்துவ விசாரம் செய்கிற மாதிரிப் பிதற்றினான். சீடன் அதைக் கேட்டு மகா ஞானவாசகம் மாதிரி வியந்தான்.

"சரி, உன் பேரு என்னான்னு நீ சொல்ல வேண்டாம். நான் குரு. நீ சிஷ்யன்... எனக்குப் பேரு குரு; உனக்குப் பேரு சிஷ்யன் நீதான் என்னை 'குருவே குருவே' ன்னு கூப்பிட ஆரம்பிச்சுட்டே... நானும் உன்னை 'சிஷ்யா சிஷ்யா' ன்னு கூப்பிடறேன்... என்னா? சரிதானா?..." என்று பேசிக்கொண்டேயிருந்தான் குரு. "எல்லாமே ஒரு பெயர்தானா?" என்று அந்தப் பேச்சிலும் எதையோ புரிந்து கொண்ட சீடனின் விழிகள் பளபளத்தன.

தன்னையே எண்ணித் திடீரென வியந்தான். இப்படியே அவர்கள் பேசிக் கொண்டிருந்தனர்.

மத்தியானமும் இரவும் அந்தச் சீடன் மடப்பள்ளியிலிருந்து தனக்குக் கிடைக்கிற புளியோதிரை, சர்க்கரைப் பொங்கல் ஆகியவற்றைப் பயபக்தியுடனும் அன்போடும் கொண்டுவந்து இந்தக் குருவுக்குப் படைத்தான். அவ்வளவு ருசியும் மணமும் புனிதமும் அன்பும் உபசரணையும் உடைய அர்த்தத்தை இவன் ஜென்மத்தில் ருசி பார்த்ததில்லை. ஆவல் மிகுதியால் தனது நடிப்பைக்கூட மறந்து அவற்றை அள்ளி அள்ளி இவன் உண்பதை அன்பு கனியப் பார்த்துக் கொண்டிருந்தான் சீடன்.

குருவுக்கு எதனாலோ கண்கள் கலங்கின. சீடன் தண்ணீரை எடுத்துக் கொடுத்தான். மறுநாள் காலை அதே மாதிரி திண்ணைக்குக் கீழே வந்து காத்து நின்றிருந்தான் சீடன். அவனுக்கு டீயும் பீடியும் வாங்கி வந்தான். குருவை அழைத்துக் கொண்டு ஆற்றங்கரைக்குப் போய் அவனது ஆடைகளைத் துவைத்துக் கொடுத்தான். அவனைக் குளிக்க வைத்து அழைத்து வந்தான்.

உச்சியில் வெயில் வருகிற வரை - குருவுக்குப் பசி எடுக்கும்வரை - அவர்கள் ஆற்றில் நீந்திக் குளித்தார்கள்.

"குளிக்கிறது சொகமாகத்தான் இருக்கு. ஆனா, குளிச்சி என்னா பிரயோசனம்..... குளிக்க குளிக்க அளுக்கு சேந்துக்கிட்டுத்தானே இருக்கு?...... அது அப்படித்தான். பசிக்குது...... திங்கறோம்...... அப்புறமும் பசிக்கத்தானே செய்யிது..... குளிக்க குளிக்க அளுக்காகும். அளுக்கு ஆக ஆகக் குளிக்கணும். பசிக்கப் பசிக்கத் திங்கணும்....... திங்கத் திங்கப் பசிக்கும்...... என்ன வேடிக்கை!" என்று சொல்லிவிட்டு குரு சிரித்தான். சிரித்துக் கொண்டே இருக்கும் போது" என்ன இது, நான் இப்படியெல்லாம் பேசுகிறேன்" என்று எண்ணிப் பயந்து போய்ச் சட்டென நிறுத்திக் கொண்டான்.

சீடன் கை கட்டிக்கொண்டு இவன் சொல்வதைக் கேட்டான். அன்றும் அதற்கு மறுதினமும் அதன் பிறகு

ஒவ்வொரு நாளும் இதே மாதிரி காலையில் டீயும் பீடியும் வாங்கித் தந்து குளிப்பாட்டி, மத்தியானம் உணவு படைத்து, அவனைத் தனிமையில் விடாமலும், அவன் தெருவில் அலையாமலும் இந்தச் சீடன் எப்போதும் அவன் கூடவே இருந்தான்.

அவன் பேசுகிற எல்லா வார்த்தைகளிலும் அவனே புதிதாகப் புரிந்து கொள்ளுகிற மாதிரி பலவிதமான அர்த்தங்கள் கண்டு இந்தச் சீடன் புளகாங்கிதம் அடைவதைச் சந்தைக்கு வருகிற சிலர் சத்திரத்துத் திண்ணையில் ஓய்வுக்காகத் தங்கி இளைப்பாறும்போது வேடிக்கை பார்த்தார்கள்.

சிலர் குருவை அடையாளம் கண்டு கொண்டு இவன் யாரோ ஒரு சித்தன் என்று அப்போதே நினைத்ததாகவும் அப்படிப்பட்டவர்கள் இப்படியெல்லாம் கந்தலுடுத்தி, அழுக்கு சுமந்து, எச்சில் பொறுக்கித் திரிவார்கள் என்றும் தன்னைப் பற்றி இவனுக்குத் தெரியாத ஒன்றைத் தெரிவித்தார்கள். அதைத் தெரிந்து கொள்வதற்கே ஒருவருக்குப் பக்குவம் வேண்டுமென்றும், அந்தப் பக்குவம் இந்தச் சீடனுக்கு இருப்பதாகவும் கூறிச் சீடனைப் புகழ்ந்தார்கள்.

அதில் சிலர், இப்படியெல்லாம் தெரியாமல் இந்தச் சித்த புருஷனை ஏசி விரட்டியடித்தற்காக இப்போது பயமடைந்து இவனிடம் மானசீகமாகவும், கீழே விழுந்து பணிந்தும் மன்னிப்பு வேண்டினார்கள்.

இந்த ஒரு சீடனைத் தவிர குருவுக்குப் பக்தர்கள் நாள்தோறும் பெருக ஆரம்பித்தார்கள். சந்தைக்கு வருகிற வியாபாரிகளும் மற்றவர்களும் இவனை வேடிக்கை பார்த்து நின்றுவிட்டு இவனுக்கு டீயும், பீடியும், பழங்களும் வாங்கித் தந்தார்கள்.

இவன் அவற்றைச் சாப்பிடுகிற அழகையும், தோலை வீசி எறிகிற லாவகத்தையும், பீடி குடிக்கிற ஒய்யாரத்தையும், விழி திறந்து பார்க்கிற கோலத்தையும், விழி மூடிப் பாராமலிருக்கிற பாவத்தையும், அவர்கள் புகழ்ந்தும் வியந்தும் பேசினார்கள்.

குருவுக்கு முதலில் இது வசதியாகவும், சந்தோஷமாகவும், பின்னர் ஒன்றும் புரியாமலும் புதிராகவும் இருந்து, கொஞ்ச நாட்களில் எல்லாம் புரியவும் புதிர்கள் விடுபடவும் தொடங்கின.

ஒரு நாள் இரவு குருவுக்குத் தூக்கம் வரவில்லை. அவன் எது எது பற்றியோ யோசித்துக் கொண்டிருந்தான். அதாவது, அந்தச் சிஷ்யனோடு பேசுகிற மாதிரித் தனக்குள்ளே பேசிக்கொண்டிருந்தான்.

அவன் நட்சத்திரங்களைப் பற்றியும், தான் இந்த உலகத்தில் வருவதற்கு முன்னால் இருந்த காலத்தைப் பற்றியும், மரணத்தைப் பற்றியும், தனக்குப் பின்னால் உள்ள காலங்களைப் பற்றியும் எந்த முடிவிலும் மனம் நிற்க முடியாத விஷயங்களைப் பற்றியெல்லாம் யோசித்தான்.

அவன் தூங்காமலே கனவு மாதிரி ஏதோ ஒன்று கண்டான். அதில் தன் குரலோ, சீடனின் குரலோ அல்லது சந்தையில் திரிகிற இவனை வணங்கிச் செல்கிற யாருடைய குரலோ மிகவும் தெளிவாகப் பேசியதைக் கேட்டான்.

"உனக்கு சிஷ்யனாக வந்திருக்கிறானே, அவன்தான் உண்மையிலே குரு... சிஷ்யனாக வந்து உனக்குக் கற்றுத் தந்திருக்கிறான்... அப்போதுதான் நீ வசப்படுவாய் என்று தெரிந்து சிஷ்யனாய் வந்திருக்கிறான். எந்தப் பீடத்திலே இருந்தால் என்ன? எவன் கற்றுத் தருகிறானோ அவன் குரு. கற்றுக் கொள்கிறவன் சீடன். பரமசிவனின் மடி மீது உட்கார்ந்து கொண்டு முருகன் அவனுக்குக் கற்றுத் தரவில்லையா? அங்கே சீடனின் மடியே குருபீடம். அவனை வணங்கு...."

பறவைகள் பாடிச் சிறகடித்துப் பறந்து சந்தைத் திடலின் மரச் செறிவில் குதூகலிக்கிற காலைப்பொழுது புலர்கிற நேரத்தில் அதே மாதிரியான குதூகலத்துடன் கண் விழித்தெழுந்த குரு. சீடனை வணங்குவதற்காகக் காத்திருந்தான். மானசீகமாய் வணங்கினான். அவன் வந்தவுடன் சாஷ்டாங்கமாய் அவன் பாதங்களில் தான் விழப்போவதை எண்ணி மெய்சிலிர்த்தான்.

ஆனால், அந்தச் சிஷ்யன் வரவே இல்லை. இந்தக் குரு அந்த மடப்பள்ளிக்கு - தன்னை ரசவாதம் செய்து மாற்றிவிட்ட சீடனைத் தேடி ஓடினான்.

மடப்பள்ளியில் உள்ளவர்கள் இவனை வணங்கி வரவேற்று உட்காரவைத்து உபசரித்தார்கள்.

குருவுக்கு அப்போது சீடனின் பெயர் தெரியாத குழப்பத்தால் என்னவென்று கேட்பது என்று புரியாமல் "என் சிஷ்யன் எங்கே?" என்று விசாரித்தான்.

அவர்கள் விழித்தார்கள். குரு அடையாளம் சொன்னான். கடைசியில் அவர்கள் ரொம்ப அலட்சியமாக "அவன் நேற்றே எங்கோ போய் விட்டானே" என்றார்கள்.

"அவன்தான் நமக்கெல்லாம் குரு!" என்றான் குரு.

"அப்படியா!" என்று அவர்கள் ஆச்சரியம் கொண்டனர்.

அதுபற்றி அவனது வேதாந்தமான விளக்கத்தை, அவர்கள் எதிர்பார்த்து நின்றனர். ஆனால், இவன் ஒன்றும் பேசவில்லை. அதன்பிறகு, ஒன்றுமே பேசவில்லை, எழுந்து நடந்தான்.

சந்தைத் திடலிலும் ஊரின் தெருக்களிலும் சீடனாகி வந்த அந்த குருவைத் தேடித் திரிந்தான் இவன். சீடனைக் காணோம். இவன் சிரித்தான். தேடுவதை விட்டு விட்டான்.

இப்போதெல்லாம் சந்தைத் திடலில் அழுக்கும் கந்தையும் உடுத்தி ஒவ்வொருவரிலும் எதையோ தேடுவது மாதிரியான கூர்த்த பார்வையுடன் இவன் திரிந்து கொண்டிருக்கிறான். இவனை யாரும் விரட்டுவதில்லை. குழந்தைகள் இவனைப் பார்த்துச் சிரித்து விளையாடுகின்றன. பெண்களும் ஆண்களும் இவனை வணங்கி இவனுக்கு எதையாவது வாங்கித் தந்து அன்புடன் உபசரிக்கிறார்கள்.

அந்தச் சீடனிடம் என்ன கற்றானோ அதனை இவன் எல்லாரிடத்தும் எல்லாவற்றிலும் காண்கிற மாதிரி நிறைவோடு சிரித்துச் சிரித்துத் திரிந்து கொண்டிருக்கிறான்.

## 9. கதவு

– கி. ராஜநாராயணன்

கதவு ஆட்டம் ஆரம்பமாகியது.

பக்கத்து வீட்டுக் குழந்தைகளும் ஆரவாரத்தோடு கலந்துகொண்டார்கள்.

“எல்லோரும் டிக்கட் வாங்கிக் கொள்ளுங்கெ” என்றான் சீனிவாசன். உடனே “எனக்கொரு டிக்கெட், உனக்கொரு டிக்கெட்” என்று சத்தம் போட்டார்கள்.

“எந்த ஊருக்கு வேணும்? ஏய்.... இந்த மாதிரி இடிச்சித் தள்ளினா என்ன அர்த்தம்.... அப்புறம் நான் விளையாட்டுக்கு வரமாட்டேன்.”

“இல்லை, இல்லை, இடிச்சித் தள்ளலெ.”

“சரி எந்த ஊருக்கு டிக்கட் வேணும்?”

குழந்தைகள் ஒருவருக்கொருவர் முகத்தைப் பார்த்துக் கொண்டார்கள். ஒருவன் “திருநெல்வேலிக்கு” என்று சொன்னான். ‘திருநெல்வேலிக்கு திருநெல்வேலிக்கு” என்று கூப்பாடு போட்டுச் சொன்னார்கள் எல்லோரும்.

லக்ஷ்மி ஒரு துணியால் கதவைத் துடைத்துக் கொண்டிருந்தாள். சீனிவாசன் வெறுங்கையால் டிக்கட் கிழித்துக் கொடுத்து முடித்ததும், கதவில் பிடித்துத் தொத்திக் கொண்டார்கள். சிலர் கதவை முன்னும் பின்னும் ஆட்டினார்கள். தன் மீது ஏறிநிற்கும் அக் குழந்தைகளை, அந்த பாரமான பெரிய கதவு பொங்கிப் பூரித்துப் போய் இருக்கும் அக் குழந்தைகளை வேகமாக ஆடி மகிழ்வித்தது. “திருநெல்வேலி வந்தாச்சி” என்றான் சீனிவாசன். எல்லோரும் இறங்கினார்கள். கதவைத் தள்ளியவர்கள் டிக்கட் வாங்கிக் கொண்டார்கள். ஏறினவர்கள் தள்ளினார்கள். மீண்டும் கதவாட்டம் தொடங்கியது.

அது பழைய காலத்துக் காரை வீடு. பெரிய ஒரே கதவாகப் போட்டிருந்தது அந்த வீட்டுக்கு. அதில் வசித்து வந்தவர்கள் முன்பு வசதி உள்ளவர்களாக வாழ்ந்தவர்கள். இப்பொழுது ரொம்பவும் நொடித்துப் போய் விட்டார்கள். அந்த வீட்டிலுள்ள குழந்தைகளில் மூத்ததற்கு எட்டு வயது இருக்கும். பெயர் லட்சுமி. அடுத்தவன் சீனிவாசன். ஆறு வயது இருக்கும்; இன்னொரு கைக் குழுந்தை.

அம்மா காட்டுக்கு வேலை செய்யப் போய் விடுவாள். அப்பா மணிமுத்தாறில் கூலி வேலை செய்யப் போய்விட்டார். லட்சுமியும் சீனிவாசனும் கைக் குழந்தையை, தாய் காட்டிலிருந்து வரும் வரை வைத்துக் கொண்டு கதவோடு விளையாடிக் கொண்டிருப்பார்கள்.

ஒரு நாள் தெருவில் ஒரு தீப்பெட்டிப் படம் ஒன்றை லட்சுமி கண்டெடுத்தாள். படத்தில் ஒரு நாய் இருந்தது. அழுக்காக இருந்ததால், படத்தில் எச்சிலைத் துப்பித் தன் பாவாடையால் துடைத்தாள். இதனால் சில இடங்களில் இருந்த அழுக்கு படம் பூராவும் பரவிற்று. ஆனால் லட்சுமிக்கு மிகவும் திருப்தி, படம் சுத்தமாகி விட்டது என்று.

படத்தை முகத்துக்கு நேராகப் பிடித்து, தலையைக் கொஞ்சம் சாய்த்துக் கொண்டு பார்த்தாள். அப்புறம் இந்தப் பக்கமாகச் சாய்த்துக் கொண்டு பார்த்தாள். சிரித்துக் கொண்டாள். காண்பிக்க பக்கத்தில் யாராவது இருக்கிறார்களா என்று சுற்றுமுற்றும் பார்த்தாள். ஒருவரும் இல்லை. வீட்டை நோக்கி வேகமாக நொண்டி அடித்துக் கொண்டே போனாள், சந்தோஷம் தாங்க முடியாமல்.

லட்சுமி வீட்டுக்கு வந்தபோது, சீனிவாசன் நாடியைக் கையில் தாங்கிக் கொண்டு வாசல் படிக்கட்டில் உட்கார்ந்திருந்தான். அவனைக் கண்டதும் லட்சுமி படத்தைப் பின்புறமாக மறைத்துக் கொண்டு, “டேய் நான் என்ன கொண்டு வந்திருக்கிறேன் சொல்லு பார்ப்போம்” என்றாள்.

"என்ன கொண்டு வந்திருக்கிறாயோ; எனக்குத் தெரியாது"

"சொல்லேன் பார்ப்போம்."

"அதென்னமோ எனக்குத் தெரியாது."

லட்சுமி தூரத்தில் இருந்தவாறே படத்தைக் காண்பித்தாள்.

"அக்கா அக்கா, எனக்குத் தரமாட்டியா" என்று கேட்டுக் கொண்டே இறங்கி வந்தான் சீனிவாசன். 'முடியாது' என்ற பாவனையில் தலையை அசைத்து, படத்தை மேலே தூக்கிப் பிடித்தாள். சீனிவாசன் அவளைச் சுற்றிச் சுற்றி வந்தான். "ஊஹூம், முடியாது. மாட்டேன்..... நான் எவ்வளவு கஷ்டப்பட்டுத் தேடி எடுத்துக் கொண்டு வந்திருக்கிறேன் தெரியுமா?" என்றாள்.

"ஒரே ஒரு தடவை பார்த்துவிட்டுக் கொடுத்துவிடுகிறேன். அக்கா, அக்கா" என்று கெஞ்சினான்.

"பார்த்து விட்டுக் கொடுத்துவிட வேண்டும்."

"சரி."

"கிழிக்கப்படாது."

"சரி சரி."

சீனிவாசன் படத்தை வாங்கிப் பார்த்தான். சந்தோஷத்தினால் அவன் முகம் மலர்ந்தது.

"டேய் உள்ளே போய் கொஞ்சம் கம்மஞ்சோறு கொண்டா, இந்தப் படத்தை நம்ம கதவில் ஒட்டணும்" என்றாள்.

"ரொம்ப சரி" என்று உள்ளே ஓடினான் சீனிவாசன்.

இரண்டு பேருமாகச் சேர்ந்து கதவில் ஒட்டினார்கள். படத்தைப் பார்த்து சந்தோஷத்தினால் கைதட்டிக் கொண்டு குதித்தார்கள். இதைக் கேட்டுப் பக்கத்து வீட்டுக் குழந்தைகளும் ஓடி வந்தன. மீண்டும் கதவு ஆட்டம் தொடங்கியது!

அந்தக் கதவைக் கொஞ்சம் கவனமாகப் பார்க்கிறவர்களுக்கு இந்தக் குழந்தைகள் ஒட்டிய படத்துக்குச் சற்று மேலே இதே மாதிரி வேறு ஒரு படம் ஒன்றை ஒட்டி இருப்பது தெரிய வரும். அந்தப் படம் ஒட்டி எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டதால், அழுக்கும் புகையும்பட்டு மங்கிப்போய் இருந்தது. ஒருவேளை அது லட்சுமியின் தகப்பனார் குழந்தையாக இருக்கும் போது ஒட்டியதாக இருக்கலாம்.

குழந்தைகள் இப்படி விளையாடிக்கொண்டிருக்கும் போது கிராமத்துத் தலையாரி அங்கே வந்தான்.

"லட்சுமி! உங்க ஐயா எங்கே?"

"ஊருக்குப் போயிருக்காக."

"உங்க அம்மா?"

"காட்டுக்குப் போயிருக்காக."

"வந்தா, தீர்வையைக் கொண்டு வந்து போடச் சொல்லு, தலையாரித் தேவரு வந்து, தேடீட்டுப் போனாருன்னு சொல்லு."

'சரி' என்ற பாவனையில் லட்சுமி தலையை ஆட்டினாள்.

மறுநாள் தலையாரி லட்சுமியின் அம்மா இருக்கும்போதே வந்து தீர்வைப் பாக்கியைக் கேட்டான்.

"ஐயா, அவரு ஊரிலே இல்லை. மணிமுத்தாறு போயி அஞ்சி மாசமாச்சி. ஒரு தகவலையும் காணோம். மூணு வருசமா மழை தண்ணி இல்லையே. நாங்க என்னத்தை வச்சு உங்களுக்குத் தீர்வைப் பாக்கியைக் கொடுப்போம்? ஏதோ காட்டிலே போய்க் கூலி வேலை செய்து இந்தக் கொளந்தைகளைக் காப்பாத்றதே பெரிய காரியம்; உங்களுக்கு இது தெரியாதா?" என்றாள்.

இந்த வார்த்தைகள் தலையாரியின் மனசைத் தொடவே இல்லை; இந்த மாதிரியான வசனங்களைப் பலர் சொல்லிக் கேட்டவன் அவன்.

"நாங்கள் என்ன செய்ய முடியும்மா இதற்கு; இந்த வருசம் எப்படியாவது கண்டிப்பாகத் தீர்வை கொடுத்துவிட வேண்டும். அப்புறம் எங்கள் மீது சடைத்துப் புண்ணியம் இல்லை" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

ஒரு நாள் காலை வீட்டின் முன்னுள்ள மைதானத்தில் குழந்தைகள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். தலையாரி, நான்குபேர் சகிதம் வீட்டை நோக்கி வந்தான். வந்தவர்கள் அந்தக் கதவைத் தூக்கிக் கழற்ற முயன்றார்கள்; முடியவில்லை. குழந்தைகள் வீட்டுப்பக்கம் இருந்தது. தலையாரியும் சேர்ந்துப் பிடித்து ஒரு மாதிரிக் கழற்றி, நான்கு பேரும் கதவைத் தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு புறப்பட்டார்கள். அந்தக் குழந்தைகளுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. ஒருவன் நாதஸ்வரம் வாசிப்பவனைப் போல் கைகளை வைத்துக் கொண்டு "பிப்பீ... பீ... பீ" என்று சத்தம் கொடுத்தான். இன்னொருவன் இரண்டு கைகளாலும், ஆள்காட்டி விரல்களை நீட்டிக் கொண்டு, உடலைப் பின் வளைத்துத் துடைகளின் மேல் ஓங்கி அடிப்பதாக பாவனை செய்து "திடும்....திடும்.... ததிக்குண.... ததிக்குண" என்று தவுல் வாசிப்பவனைப் போல் முழங்கினான். சீனிவாசனும் இதில் பங்கெடுத்துக் கொண்டான். இப்படி உற்சாகமாக குழந்தைகள் கதவைத் தூக்கிக் கொண்டு செல்கிறவர்களின் பின்னே ஊர்வலம் புறப்பட்டார்கள்.

தலையாரியால் இதைச் சகிக்க முடியவில்லை. "இப்போ போகிறீர்களா இல்லையா கழுதைகளே" என்று கத்தினான். குழந்தைகள் ஓட்டம் பிடித்தன.

அவர்கள் வீட்டுக்குத் திரும்பிவரும் போது, லட்சுமி வாசல் படியில் உட்கார்ந்து அழுது கொண்டிருந்தாள். எல்லோரும் அரவம் செய்யாமல், அவளுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டனர். ஒருவரும் ஒன்றும் பேசவில்லை. சீனிவாசனும் முகத்தை வருத்தமாக வைத்துக் கொண்டான். இப்படி வெகு நேரம் அவர்களால் அங்கு இருக்க முடியவில்லை. தற்செயலாக

ஒரு பெண், 'நான் வீட்டுக்குப் போறேன்'' என்று எழுந்தாள். உடனே எல்லோரும் அங்கிருந்து புறப்பட்டுப் போய்விட்டார்கள். லட்சுமியும் சீனிவாசனும் மாத்திரம் அங்கிருந்தார்கள். வெகுநேரம் அவர்களும் ஒருவருக்கொருவர் பேசவில்லை.

கைக்குழந்தை அழும் குரல் கேட்கவே லட்சுமி உள்ளே திரும்பினாள். இதற்குள் சீனிவாசன் அக்குழந்தையை எடுத்துக் கொள்ளப் போனான். குழந்தையைத் தொட்டதும் கையைப் பின்னுக்கு இழுத்தான். அக்காவைப் பார்த்தான். லட்சுமியும் பார்த்தாள்.

"பாப்பாவைத் தொட்டுப்பாரு அக்கா; உடம்பு சுடுது'' என்றான். லட்சுமி தொட்டுப் பார்த்தாள்; அனலாகத் தகித்தது.

சாயந்திரம் வெகுநேரம் கழித்து அம்மா தலையில் விறகுச் சுள்ளிகளுடன் வந்தாள். சுள்ளிகள் சேகரிக்கும் போது கையில் தேள் கொட்டி இருந்ததால், முகத்தில் வலி தோன்ற அமைதியாக வந்து குழந்தைகளின் பக்கம் அமர்ந்து கைக் குழந்தையை வாங்கிக் கொண்டாள். 'உடம்பு சுடுகிறதே?'' என்று தனக்குள் கேட்டுக் கொண்டாள். இதற்குள் குழந்தைகள் காலையில் நடந்த சேதியை அம்மாவிடம் சொன்னார்கள்.

இந்தச் செய்தியைக் கேட்டதும் ரங்கம்மாவுக்கு மூச்சே நின்று விடும் போலிருந்தது; உடம்பெல்லாம் கண்ணுக்குத் தெரியாத ஒரு நடுக்கம் பரவியது. அவள் விடும் சுவாசத்தின் வெப்பம் அதிகமாகியது. வயிற்றில் தாங்க முடியாத ஒரு வலி தோன்றியது போல் குழந்தையை இறுகப் பிடித்துக் கொண்டாள்.

குழந்தைகளுக்கு முன் அழக்கூடாது என்று எவ்வளவு தான் அடக்கினாலும் முடியவில்லை. "என்னைப் பெற்ற தாயே'' என்று அலறி விட்டாள். பயத்தினால் குழந்தைகள் அவள் பக்கத்திலிருந்து விலகிக் கொண்டார்கள். இனம் தெரியாத காரணத்தினால் அவர்களும் அழ ஆரம்பித்தார்கள்.

மணிமுத்தாறிலிருந்து ஒரு தகவலும் வரவில்லை. நாள்கள் சென்று கொண்டே இருந்தன. இரவு வந்து விட்டால் குளிர் தாங்க முடியாமல் குழந்தைகள் நடுநடுங்குவார்கள். கதவு இல்லாததால் வீடு இருந்தும் பிரயோஜனமில்லாமல் இருந்தது. கார்த்திகை மாசத்து வாடை, விஷக்காற்றைப் போல் வீட்டினுள் வந்துவந்து அலைமோதிக் கொண்டே இருந்தது. கைக் குழந்தையின் ஆரோக்கியம் கெட்டுக் கொண்டே வந்தது. ஒரு நாள் இரவு வாடை தாங்காமல் அது அந்த வீட்டை விட்டு அவர்களையும் விட்டுப் பிரிந்து சென்று விட்டது. ரங்கம்மாளின் துயரத்தை அளவிட்டுச் சொல்ல முடியாது. லட்சுமிக்காகவும், சீனிவாசனுக்காகவுமே அவள் உயிர் தரித்திருந்தாள்.

சீனிவாசன் இப்பொழுது பள்ளிக் கூடம் போகிறான். ஒரு நாள் அவன் மத்தியானம் பள்ளிக் கூடத்திலிருந்து திரும்பும் போது, ஒரு தீப்பெட்டிப் படம் கிடைத்தது அவனுக்கு. கொண்டுவந்து தன் அக்காவிடம் காண்பித்தான். லட்சுமி அதில் அவ்வளவாக ஆர்வம் கொள்ளவில்லை.

"அக்கா, எனக்கு சீக்கிரம் கஞ்சி ஊத்து, பசிக்கிறது; சாப்பிட்டுவிட்டு இந்தப் படத்தை ஒட்டணும்."

"தம்பி கஞ்சி இல்லை" இதை அவள் மிகவும் பதட்டத்தோடு சொன்னாள்.

"ஏன்! காலையில் நீ காச்சும் போது நான் பார்த்தேனே?"

'ஆம்' என்ற முறையில் தலையசைத்துவிட்டு, "நான் வெளியே போயிருந்தேன். ஏதோ நாய் வந்து எல்லாக் கஞ்சியையும் குடித்து விட்டுப் போய்விட்டது.... கதவு இல்லையே" என்றாள் துக்கமும் ஏக்கமும் தொனிக்க. தன்னுடைய தாய் பசியோடு காட்டிலிருந்து வருவாளே என்று நினைத்து உருகினாள் லட்சுமி.

சீனிவாசன் அங்கே சிதறிக்கிடந்த கம்மம் பருக்கைகளை எடுத்துப் படத்தின் பின்புறம் தேய்த்து ஒட்டுவதற்கு வந்தான். கதவு இல்லை. என்ன

செய்வதென்றே தெரியவில்லை. சுவரில் ஒட்டினான். படம் கீழே விழுந்து விட்டது. அடுத்த இடத்தில் அடுத்த சுவரில், எல்லாம் ஒட்டிப் பார்த்தான்; ஒன்றும் பிரயோஜனம் இல்லை. ஏமாற்றத்தாலும் பசியாலும் அழ ஆரம்பித்து விட்டான்.

சாயந்திரம் லட்சுமி சட்டிபானைகளைத் தேய்த்துக் கழுவிக் கொண்டிருந்தாள். சீனிவாசன் முகத்தில் ஆவல் துடிக்க, மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க லட்சுமியிடம் ஓடி வந்தான்.

"அக்கா அக்கா நம்ம பள்ளிக்கூடத்துக்குப் பக்கத்திலே சாவடி இருக்கு பாரு. அதுக்குப் பின்புறம் நம்ம வீட்டு கதவு இருக்கக்கா! கண்ணாலே, நான் பார்த்தேன்" என்றான்.

"அப்படியே நிஜமாகவா? எங்கே வா பார்ப்போம்" என்று சீனிவாசனின் கையைப் பிடித்தாள். இருவரும் சாவடியை நோக்கி ஓடினார்கள்.

உண்மைதான். அதே கதவு சாத்தப்பட்டு இருந்தது. தங்கள் நண்பனை இனம் கண்டு கொண்டார்கள் அச்சிறுவர்கள். பக்கத்தில் யாராவது இருக்கிறார்களா எனச் சுற்றுமுற்றும் பார்த்தார்கள். ஒருவரும் இல்லை.

அவர்களுக்கு உண்டான ஆனந்தத்தைச் சொல்ல முடியாது. அங்கே முளைத்திருந்த சாரணத்தியும், வாழைச் செடிகளும் அவர்கள் காலடியில் மிதிபட்டு நொறுங்கின. அதிவேகமாய் அந்தக் கதவின் பக்கம் பாய்ந்தார்கள். அருகில் போய் அதைத் தொட்டார்கள். தடவினார்கள். அதில் பட்டு இருந்த கரையான் மண்ணை லட்சுமி தன் பாவாடையால் தட்டித் துடைத்தாள். கதவோடு தன் முகத்தை ஒட்ட வைத்துக் கொண்டாள். அழ வேண்டும்போல் இருந்தது அவளுக்கு! சீனிவாசனைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். முத்தமிட்டாள். சிரித்தாள். கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது. சீனிவாசனும் லட்சுமியைப் பார்த்து சிரித்தான். அவர்கள் இருவரின் கைகளும் கதவைப் பலமாகப் பற்றி இருந்தன.

# 10. சண்டையும் சமாதானமும்

**- நீல. பத்மநாபன்**

'அம்மா.......'

மிகவும் அருகில் தெளிவாகவும் அடக்கமாகவும் கேட்ட அந்தக் குரல் யாருடையது என்று மாரியம்மைக்கு புரிந்து போய்விட்டது. எனினும் நம்ப முடியவில்லை.

செல்லையா வந்துட்டானா?

மாரியம்மையின் விழிகள் கனத்தன.

நாலு நாள் பட்டினியின் அசதியும், ஜுரத்தின் களைப்பும் வயோதிகத்தின் தளர்ச்சியும் கூடச் சேர்ந்திருந்ததால் அவள் பார்வைக்கு நல்ல தெளிவு இருக்கவில்லை. எனினும் மங்கலாகத் தெரிந்த பரந்த முகமும், இருபக்கங்களிலும் முறுக்கிவிடப்பட்டிருந்த பெரிய மீசையும் அவனை இனம் கண்டுகொள்ள வைத்துவிட்டன.

காய்ச்சல் இருக்கிறா என்று அவள் நெற்றியைத் தொட்டுப் பார்த்த அவன் கையை, நட்டாற்றில் முழுக இருந்தவளுக்குக் கிடைத்த அடைக்கலமாய் அவள் பற்றிக் கொண்டாள்.

மாரியம்மையின் முகத்தில் மகிழ்ச்சியின் வரிகள் மின்னின. அவள் விழிகள் நிறைந்து விட்டன. செல்லையா ஒன்றும் பேசவில்லை தொண்டை கரகரக்க அவளே கேட்டான்;

"நீ எப்பம்லே வந்தே?"

"ரண்டுமூணு மணி நேரத்துக்க முந்தியே நா வந்தாச்சு. ஒன்னைக் கூப்பிட்டேன்". நீ களைச்சுப் போய் நல்லா ஒறங்கிட்டிருந்தே. எளுப்பாண்டா முண்ணு நேரே 'தட்டு'க்குப் (மாடிக்கு) போயி தம்பி தங்கசாமீட்டே பேசீட்டு இருந்தேன்."

முகத்தில் சற்றுமுன் பளீரென்று பிரகாசித்த நம்பிக்கையின் ஒளி சடக்கென்று மறைந்து, அங்கே மீண்டும் ஏமாற்றத்தை இருள் சூழ்ந்து கொண்டது.

"அப்பம் நீ நேரத்தையே வந்தாச்சா?"

அவள் பெருமூச்சு விட்டாள். நாலைந்து நாட்களாகப் பகல் இரவு நேரங்களின் பேதத்தைப் பற்றி நினைத்துப் பார்க்க இயலாமல் கிடந்த அவள் சுற்றுமுற்றும் பரக்கப் பரக்கப் பார்த்தாள்.

மங்கலாக மின்சார விளக்கு அழுது வடிகிறது. எதிரில் தெரிந்த ஜன்னலின் கம்பிகள் கருமையான ஆகாயப் பின்னணியை நெடு நீளத்தில் கோடு கிழித்துக் காட்டுகின்றன.

அப்போ, ராத்திரி ஆயாச்சா? அப்படியென்றால் மருமகள் தமிழ்க் கொடியும் பள்ளிக்கூடத்திலிருந்து வந்திருப்பாள்.

தெருவில் சிறுவர் சிறுமிகள் ஓடிப் பிடித்து விளையாடும் அரவம் கேட்கிறது... தெரு நடையில் கைக்குழந்தையை இடுப்பில் ஏந்திக் கொண்டு நிற்கும் ஒன்றிரண்டு பெண்களின் முகங்கள் நிழலாடுகின்றன.

கீழ்ப்போர்ஷனில் வசிக்கும் வீட்டுச் சொந்தக்காரி சொர்ணம்மா மெல்ல வெளியே வந்து திண்ணை நடையில் நின்றாள்.

"ஆனாலும் ஒங்கம்மைக்கு இந்த வயசான காலத்திலே இவ்வளவு பிடிவாதம் கூடாது. இந்த நாலஞ்சு நாளா அறப்பட்டினி, மூத்த மகன் பெங்களூரிலிருந்து வரமுந்தி, செத்துப் போனா போகட்டுமுண்ணு, ஒரு சொட்டுத் தண்ணியோ, மருந்தோ கூடக் குடிக்காமே அந்தக் கெடையா கெடக்கா...."

கால் சட்டையும், ஷூஸும் அணிந்திருந்ததால் தரையில் உட்காருவதில் இருக்கும் அசௌகரியத்தைப் பொருட்படுத்தாமல் அம்மா படுத்திருந்த அந்தப் பாயின் ஓர் ஓரத்தில் ஒருவாறு கஷ்டப்பட்டு அவன் உட்கார்ந்தான்.

"உம்..... நாலஞ்சு நாளா பட்டினி, ஏதாவது குடிக்காண்டாமா?"

"ஒண்ணும் வேண்டாம்லே. கொஞ்சம் வெஷம் இருந்தா வாங்கிட்டு வா. எனக்கு இவ்வளவு நாளு வாந்தது எல்லாம் போரும்பா போரும்."

'தன்னிடம் வந்து விவரங்களைக் கேட்டு அறியும் முன், தங்கசாமியிடமும் அவன் அருமாந்தப் பெண்டாட்டி தமிழ்க்கொடியிடமும் போய் அவர்கள் வாய் வழி எல்லாவற்றையும் கேட்டறிந்துவிட்டு, சாவகாசமாய்த் தன்னிடம் வந்திருக்கிறானே இவன்?' என்று செல்லையாவின் மீதும் ஒருவித எரிச்சல் வர, தன் தலையில் அடித்தவாறு இப்படிச் சொல்கையில் அவள் அழுதே விட்டாள்.

செல்லையாவுக்கு அந்தக் காட்சி மிகவும் வேதனையை உண்டு பண்ணியது என்பதை அவன் முகம் காட்டியது.

தங்கசாமியைவிடப் பத்து வயசு மூத்தவன் அவன். செல்லையாவுக்கு இப்போது முப்பத்தஞ்சு வயசு இருக்கும். நாகர்கோவிலில் நாகம்மாள் மில்லில் மேஸ்திரியாக இருக்கிறான். என்னவோ ஒரு புதிய மெஷினின் ஆறு மாதப் பயிற்சிக்காக, மில்லில் இருந்தே அவனைப் பெங்களூருக்கு அனுப்பியிருந்தார்கள். பெங்களூருக்குப் போய் மூணு மாசம்கூட இருக்காது; அதற்குள் அம்மாவின் அவசரக் கடிதம் கண்டு திருவனந்தபுரத்துக்கு வந்திருக்கிறான். அவனுக்கு, சின்னவனைவிட அம்மாவிடம் அதிகப் பாசம். இது மாரியம்மைக்கு நன்றாகத் தெரியும்.

"சரி, தம்பி வீட்டிலிருந்துதானே ஒண்ணும் குடிக்கமாட்டே? நா கடேலிருந்து வாங்கிட்டு வந்து தந்தாலும் குடிக்கமாட்டெயா? உம். நா இன்னா வந்துட்டேன்" என்று எழுந்தான் அவன்.

மாரியம்மையின் சம்மதத்துக்குக் காத்திராமல் வெளிவாசலின் பக்கத்தில் சென்றவன் திரும்பிச் சொர்ணம்மாவிடம், " டீ வங்கிட்டு வர ஒரு சின்னப்

அவள் உள்ளே சென்று, திருகு மூடி போட்ட ஒரு ஸ்டீல் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தாள். அதை வாங்கிக்கொண்டு தெருவில் இறங்கி நடந்தான்.

இனி, செல்லையா திரும்பி வந்த பிறகுதான் கேஸ் விஸ்தாரம் நடக்கும் என்பதை அறிந்துகொண்டு அதை ஒரு இடைவேளையாகக் கருதி, தத்தம் வீடுகளுக்குச் சென்றார்கள், வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்ற அண்டை வீட்டுப் பெண்கள்.

கனத்த இமைகளைத் திறக்க முடியாமல் அந்தத் திண்ணையின் ஓரத்தில் மாரியம்மை ஒடுங்கிப் போய்த் தனிமையில் அப்படியே கிடந்தாள்.

தூக்கமா மயக்கமா என்று புலப்படவில்லை. மாடியில் குடியிருக்கும் இளைய மகன் வீட்டுச் சந்தடி., அதோடு கீழ்ப்போர்ஷனில் வசிக்கும் சொர்ணம்மா குடும்பத்து இயக்க ஒலிகள், வீட்டின் உள்ளிலும், வெளியில் தெருவிலும் நடப்பவர்களின் காலடியோசைகள்.

சுரம் தொடங்கும் நாள் வரை வயிற்றில் பசி கிள்ளுவதை அவளால் நன்கு உணர முடிந்தது. இப்போது பசியை அவளால் உணர்ந்தறிய முடியவில்லைதான். எனினும், செல்லையாவின் கையிலிருந்து சுடச்சுட ஏதாவது வாங்கிக் குடித்துத் தன் உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டால் தேவலை என்ற மன உறுத்தலும் இப்போது இல்லாமல் இல்லை.

சற்றுக் கழிந்து சரக்சரக்கென்று ஷூஸ் தெருவில் உராயச் செல்லையா உள்ளே வந்தான். கையில் ஒரு சிறு பொட்டலத்தில் ரொட்டியும் ஆரஞ்சும் இருந்தன. தவிர, பாத்திரத்தில் சுடச்சுட டீயும்.

கால் சட்டை ஜோபியிலிருந்து எடுத்த வர்ண வெள்ளித் தாளில் அழகாக ஒட்டியிருந்த ஏழெட்டு மாத்திரைகளில் ஒன்றைக் கிழித்தெடுத்தான். மாரியம்மையைக் கைத்தாங்கலாகத் தாங்கி உட்கார வைத்து அவள் வாயில்

